# புதுவையில் வெற்றி

## ரௌடிஸம் தோற்றது
## மக்கள் முன்னணி வென்றது

Phone: 85777 விலை 3 அணு இலங்கையில் 25 சதம்

# ஜனசக்தி

(கம்யூனிஸ்ட் கட்சி வார இதழ்)

மலர் 11] ஞாயிறு 31—7—1955 [இதழ் 45

விடுதலையடைந்த புதுவை ராஜ்யத்தின் முதல் பொதுத் தேர்தல் முடிந்துவிட்டது. மக்கள் முன்னணி மகத்தான வெற்றி பெற்று வாகை சூடி ஜெயபேரிகை கொட்டியுள்ளது. புதுவை ராஜ்யமே ஆனந்த வெள்ளத்தில் மூழ்கியுள்ளது.

இரு நூறு ஆண்டுகள் பிரெஞ்சு ஏகாதிபத்திய ஆட்சியிலே அவதியுற்ற மக்கள், குறிப்பாக சென்ற ஏழரை ஆண்டுகள் குபேர் கும்பலின் கொடூர ஆட்சியில் சொல்லொணாத இன்னல்களுக்காளான மக்கள் ஈடும் இணையுமற்ற வெற்றியைக் கண்டுவிட்டார்கள்.

புதுவை ராஜ்ய சட்டசபைக்கு மொத்தம் 39 ஸ்தானங்கள். காங்கிரஸ் 21 ஸ்தானங்களையும், மக்கள் முன்னணி 16 ஸ்தானங்களையும், மக்கள் முன்னணியின் ஆதரவு பெற்ற சுயேச்சைகள் இதர 3 ஸ்தானங்களையும் கைப்பற்றியுள்ளனர். இவர்கள் மூவருமே முன்னணியுடன் இருப்பதாக, தேர்தல் காலத்தில் உறுதி கூறியுள்ளனர்.

அகில இந்திய காங்கிரஸும், தமிழ்நாடு காங்கிரஸும் முன்னாள் பிரெஞ்சிந்திய சோஷலிஸ்ட் கட்சியினருக்கு தேசபக்த வேஷம் போட்டு, எப்படியாவது பெருத்த மெஜாரிட்டியுடன் அவர்களை வெற்றிபெறச் செய்ய பகீரதப் பிரயத்தனம் செய்தனர். யாரை ரௌடிகள், குண்டர்கள் என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும், இந்திய சர்க்காரும் 1951–52 ஆண்டுகளில் வருணித்தார்களோ அவர்கள் தேசபக்தர்கள் என பறைசாற்றி, காந்திஜி, நேருஜி ஆகிய இருவரின் பெயரைக் கூறி, சுலபமாக வெற்றி பெறலாமென மனக்கோட்டை கட்டினர். ஆனால் அது அவ்வளவு சுலபமல்ல என்பது அவர்களுக்கே ஓரளவு புரிந்துவிட்டது. மக்கள் முன்னணி அமைக்கப்பட்டு, அதன் கூட்டங்களுக்கு ஆயிரக் கணக்கிலே மக்கள் திரண்டு வருவதைக் கண்ட ஆளும் கூட்டம் குபேரின் வழியை பின்பற்றி ரௌடித்தனத்தை கட்டவிழ்த்துவிட்டது. புதுவை ராஜ்ய அரசாங்கமும், அதன் பிரதம கமிஷனர் கேவல்சிங்கும் தேர்தலுக்கு முன்பே, பல்வேறு முறைகளில் பகிரங்க ஆதரவை இக்குபேர் கும்பலுக்கு கொடுக்க முயன்றனர். தேசிய விஸ்தரிப்பு திட்ட திறப்பு விழாக்கள். அரசாங்க சார்பாக நடத்தப்பட்ட கூட்டங்கள் ஆகியவற்றிலெல்லாம் இத்திருக் கூட்டத்திற்கு முக்கிய ஸ்தானம் அளிக்கப்பட்டது. ஏன்? குபேர் கூட்டத்தையும், செல்லான் கூட்டத்தையும் ஒன்று சேர்க்கும் திருப்பணியில் கேவல்சிங்கும் ராஜாங்க மாளிகையும் தங்கள் பங்கை ஆற்றின. போலீஸ் பல ரூபங்களில் பகிரங்கமாக உதவியது. அகில இந்திய காங்கிரஸ் தலைவர் தேபர் முதல் மத்திய மந்திரிகள், சென்னை மந்திரிகள் உள்பட பல பெரும் காங்கிரஸ் தலைகள் புதுவைக்கு விஜயம் செய்து குபேருக்கு ஆதரவு தேட முயற்சித்தனர்.

### ரௌடிகள் தாக்குதல்

திருக்கனூர் 23–6–55 அன்று ஆரம்பித்த தேர்தல் இயக்கத்தைத் தொடர்ந்து ரௌடித்தனமும் தலைவிரித்துத் தாண்டவமாடியது. பழைய குபேரின் ரௌடிகள் முழு போதையிலே 'காந்திக்கு ஜே' போட்டுக்கொண்டு மக்கள் முன்னணி ஊழியர்களைத் தாக்க ஆரம்பித்தனர். ஆனால் புதுவை போலீஸோ இந்த ரௌடிகளின் பின்னே சென்று மக்கள் முன்னணி ஊழியர்களையே கைது செய்தது. காலிகள் அட்டகாசமும், போலீஸ் உதவியும் மக்கள் மத்தியிலே பெரும் ஆத்திரத்தை உண்டுபண்ணியது. நூற்றுக் கணக்கான மக்கள் முன்னணி ஊழியர்கள் காங்கிரஸ் போஸ்டர் கிழித்தார்கள், காங்கிரஸ் கொடியை கிழித்தார்கள் என்ற பல பொய்க்கேசுகளுக்காக கைது செய்யப்பட்டனர். ஆனால் ரௌடிகள் எவ்வித பயமுமின்றி தங்கள் காலித்தனத்தை தொடர்ந்து நடத்தினர்.

தேர்தலுக்கு ஒரு வாரத்திற்கு முன் ரௌடித்தனம் தலைவிரித்தாடியது. குறிப்பாக காங்கிரஸ் தலைவர் தேபரின் விஜயத்திற்கு இரு தினங்கள் முன்பும் பின்னும் ரௌடிகள் செய்யாத அக்கிரமங்களில்லை. போலீஸ் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஒரு உதாரணத்தின்மூலம் இதைத் தெளிவாக விளக்கமுடியும். 20-7-55 அன்று பகல் 3–30 மணிக்கு ஒருசில ரௌடிகள் கதர் சட்டைகளணிந்துகொண்டு, புதுவை நகரின் ஒரு பகுதியான முத்தியால்பேட்டையிலுள்ள மக்கள் முன்னணி அலுவலகத்தில் புகுந்து தாக்கி பலரைக் காயப்படுத்தினர். ஆனால் போலீஸ் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. அதற்கு மாறாக காங்கிரஸ்காரர்களை திட்டினார்கள். பயமுறுத்தினார்கள் என்று சொல்லிக்கொண்டு பொய்க்கேசுகளை முக்கியமான மக்கள் முன்னணி ஊழியர்கள்மேல் சுமத்தி ஏறத்தாழ இருநூறு பேரை ஒரு வாரத்தில் கைதுசெய்தனர். முத்துப்பிள்ளை அசெம்பிளித் தொகுதியிலேயுள்ள உப்பளம் முனிசிபல் தொகுதியின் ம. மு. அபேட்சகர் திரு. மதுரமுத்து மரேஷல் மில்லில் வேலைசெய்துகொண்டிருக்கும்போது கைது செய்யப்பட்டு தேர்தலுக்கு முதல்நாளன்றுதான் விடுதலையடைந்தார்.

ஆனால் அதேசமயத்தில், உருளையம்பேட்டை முன்னணி அபேட்சகர் தோழர் சாம்பசிவமும், குசப்பாளையம் முன்னணி அபேட்சகர் தோழர் நாராயணமும் தாக்கப்பட்ட காலத்தில், அந்த ரௌடிகள் மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

### பயமுறுத்த இயலவில்லை

இவ்விதம் ரௌடித்தனமும், போலீஸும், கள்ளுமொந்தையும் காங்கிரஸ் அபேட்சகர்களுக்காக வேலை செய்யும்பொழுதே, பணமும் தண்ணீராக வாரி இறைக்கப்பட்டது. ஆனால், இதனையெல்லாம் மக்களைப் பயமுறுத்த இயலவில்லை. தேர்தலுக்கு முன்பிருந்ததைவிட ம. மு.வின் பொதுக்கூட்டங்களுக்கு ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டனர். பொதுக்கூட்டங்கள் மட்டுமின்றி தொகுதிகளிலும், கிராமங்களிலும், தெருக்களிலும் நடந்த தேர்தல் ஊழியர் கூட்டங்களுக்கு நூற்றுக்கணக்கில் கூடினர். மாதர் சங்க ஊழியர்கள் கிராமம் கிராமமாகச் சென்று பெண்கள் கூட்டங்கள் நடத்தி ம. மு. வுக்கு ஓட்டுப்போட கூறினர். இந்த மாதர் கூட்டங்களிலெல்லாம் பெண்கள் நூற்றுக்கணக்கில் திரண்டனர். பல இடங்களில் மாதர் சங்க ஊழியர்கள் மேள தாளங்களுடன் வரவேற்கப்பட்டு கூட்டம் முடிந்த பின் அதே மேள தாளங்களுடன் நூற்றுக்கணக்

(11-ம் பக்கம் பார்க்க)

## பாண்டிச்சேரி மக்களுக்கு
## கம்யூனிஸ்ட் கட்சி வாழ்த்து

பாண்டிச்சேரி ராஜ்ய சட்டசபைத் தேர்தலில் பிரமாத வெற்றிபெற்றதற்காக பாண்டிச்சேரி வாக்காளர்களையும், கட்சி யூனிட்டுகளையும், இதர நண்பர்களையும் இந்தியக்கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு கமிட்டி வாழ்த்துகிறது. பொது மக்களைப் பிரதிநித்துவப் படுத்துவது தானே தான் என்று காங்கிரஸ் கட்சி பாத்தியதை கொண்டாடுவதைத் தேர்தல் முடிவுகள் பொய்யாக்குகின்றன. சுயேச்சையான, நியாயமான தேர்தல்களுக்காகவும், கம்யூனிஸ்ட் கட்சிமீதும் அதன் ஆதரவாளர்கள் மீதும் கட்டவிழ்த்துவிடப்பட்ட ரவுடித்தனத்தையும், அவதூறுகளையும் எதிர்த்தும் தேர்தல் பிரச்சார காலத்தில் **மக்கள் முன்னணி** தொடர்ச்சியாகப் போராட வேண்டியிருந்தது என்பதை ஞாபகப்படுத்திக்கொள்வது நலமாயிருக்கும்.

தேர்தல் காலத்தில் உருவாக்கிய ஒற்றுமையை மககள் முன்னணியும், சுயேச்சையாளரும் மேலும் உறுதிப்படுத்துவார்களென்றும், விஸ்தரிப்பார்கள் என்றும் நாங்கள் நம்புகிறோம்; பாண்டிச்சேரி ராஜ்ய சட்டசபைக்குள் மக்களின் நலன்களைத் திறமையுடன் பாதுகாக்கக்கூடிய, மக்களின் மிகுந்த நம்பிக்கைக்குப் பாத்திரமான ஊழியர்களாகப் பணியாற்றுவார்களென்றும் நாங்கள் நம்புகிறோம்.

## தேசீயக் கொடியை எரிக்காதீர்!
## கம்யூனிஸ்ட் கட்சி கண்டனம்

ஆகஸ்டு முதல் தேதியன்று இந்திய தேசியக் கொடியை எரிப்பதென திராவிடக் கழகம் முடிவு செய்திருப்பதை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு கமிட்டி கண்டிக்கிறது. நம்முடைய தேசிய கௌரவத்தை பங்கப்படுத்தக்கூடிய, சகலரையும் ஆத்திரமூட்டக்கூடிய, பொது வாழ்வை சீர்குலைக்கக்கூடிய இந்த நடவடிக்கையைக் கம்யூனிஸ்ட் கட்சி எதிர்க்கும்.

இந்திய தேசியக் கொடி எந்த ஒரு குறிப்பிட்ட அரசியல் கட்சியின் கொடியுமல்ல; ஆனால், இந்தியாவின் சுதந்திரம், அரசுரிமையின் சின்னமாகும். தேசியக் கொடியை எரிப்பதானது இந்திய மக்கள் அனைவரையும்—இந்தியா சுதந்திரமடைவதற்காக பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துப் போராடி சர்வசங்கப்பரித் தியாகம் செய்த தமிழ் மக்கள் உட்பட சகல இந்திய மக்களையும்—படுகேவலமாக அவமதிப்பதாகும்.

கட்டாய இந்தி எதிர்ப்பு என்ற காரணம் கூறி, தேசியக் கொடியை எரிக்க முற்பட்டால், தமிழ் மக்கள் நிச்சயம் அதை அனுமதிக்கமாட்டார்கள். திராவிடக் கழகத் தலைவர்கள் பொதுஜன அபிப்ராயத்தை, மதித்து நடப்பார்கள் என்றும், தாங்கள் பிரகடனம் செய்திருக்கும் நடவடிக்கையைக் காலதாமதமின்றி கைவிடுவார்கள் என்றும் நாங்கள் நம்புகிறோம்.

வி. சுப்பையா

கிளமென்ஸோ

ஜோசப் லெத்தூர்

எம். எம். ஹுசேன்

பாரதிதாசன்

வே. நாராயணசாமி

ரங்கநாதன்

கோவிந்தராஜு நாயக்கர்

**தலையங்கம்**

# ஜெனிவாவின் சாதனை

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நால்வர் மகாநாடு முடிவடைந்தது. மனித வர்க்கம் ஆவலுடன் கண்பூத்துப் போகக் காத்துக்கிடந்த சம்பவம் வெற்றிகரமாக நடைபெற்றது. மக்களிடையேயுள்ள யுத்த பயத்தையும், சமாதான தாகத்தையும் கணக்கிலெடுத்துக்கொள்ள வேண்டும், இம்மகாநாடு வெற்றியடைய வேண்டும் என்று உலகமே ஒரு குரலில் கோஷித்தது.

மகாநாட்டு முடிவுகள் நம்பிக்கைக்கு இடந்தருவன. சமாதானப் பணிகளுக்கு உத்வேக மூட்டுவன. சமாதான இயக்கத்தின் சாதனை என்றே கூறலாம்.

பிரச்னைகளை சமரசமாகப் பேச்சு வார்த்தைகள் மூலம் தீர்த்துக்கொள்ளலாம் என்ற கோட்பாட்டுக்கு ஜெனிவா மகாநாடு வெற்றிச் சங்கநாதம் முழக்கியிருக்கிறது. 'கைவலுத்தவன் பக்கம் நியாயம்' என்ற பலாத்கார-போர் வழிக்குத் தோல்வி கிட்டியுள்ளது.

பத்தாண்டுகளுக்குப் பின்னல் நான்கு வல்லரசுகள் கூடும் இந்த மகாநாடு சர்வதேசப் பிரச்னைகளுக்கு சமரசம் காணப் புதியதோர் பாதை திறக்கிறது. நெருக்கடிகள் தளர்ந்து, பரஸ்பர நம்பிக்கையும் சமாதான சகஜீவனமும் தழைத்தோங்குவதற்கான ஒளி மிகுந்த வருங்காலத்தைத் திரை நீக்கிக் காட்டியிருக்கிறது.

பத்தாண்டுகளுக்குப் பின்னல் ஒரு புதிய அத்தியாயம் தொடங்கியது. பரஸ்பரம் புரிந்துகொண்டு நேச உணர்வுடன் ஒத்துழைப்பு சூழ் நிலையை சிருஷ்டிக்க முடிந்தது.

உலகை அலைத்து வரும் பல பிரச்சினைகளில் இன்னும் அபிப்பிராய வேற்றுமைகள் இருப்பது வாஸ்தவம். இவற்றை மேலும் பேச்சுவார்த்தைகள் நடத்திச் சமரசமாகத் தீர்க்க வேண்டும். இதற்கான அஸ்திவாரத்தை இம்மகாநாடு போட்டு விட்டது.

சோவியத் பிரதிநிதியின் ஆலோசனைகள் உருப்படியானவை. பொது உடன்பாட்டுக்கு உகந்தவை. செயல்படத் தகுந்தவை.

ஆயுதக்குறைப்பு, அணுசக்தி ஆயுதங்கள் தடை சம்பந்தமாக இம்மகாநாடு சில முயற்சிகளைச் செய்திருக்கிறது.

இந்த சாதனைகள் எல்லாம் சமாதானத்தை விரும்பும் சகல மக்களுக்கும் சாதகமானவை; அவர்களது அபிலாஷைகளைப் பிரதிபலிப்பவை. சர்வதேச நிலையில் இம்மகாநாடு பெரிய மாற்றங்களை விளைவிக்கும்.

இந்த சாதனைகள் எளிதில் கிட்டிவிடவில்லை. மக்களின் இடையருத கிளர்ச்சி, சமாதான சக்திகளின் சளையாத போராட்டம் இவற்றின் விளைவே இச்சாதனைகள்.

பார்மோஸா விஷயம், ஐ. நா.வில் மக்கள் சீனவுக்குரிய ஸ்தானம்போன்ற பிரச்சினைகள் விவாதிக்கப்படவில்லை. சோவியத் பிரதிநிதி இவற்றை எடுத்துக் கூறினர்.

இதே கட்டத்தில் இந்தோ-சீனவில் தலையீடு நடக்கிறது ஜெனிவா ஒப்பந்தம் மீறப்படுகிறது. பார்மோஸாவில் அமெரிக்கத் துருப்புகள் குவிகின்றன. மலாயாவில் சியாட்டோ தலையிட ராணுவம் திரட்டுகிறது.

இந்தப் பிரச்சினைகள் அனைத்தையும் சமரசமாகத் தீர்த்தாகவேண்டும். சமாதான சக்திகள் ஓய்வும் ஒழிதலுமின்றிக் கிளர்ச்சி செய்யவேண்டும். தனது சமாதானக் கொள்கைக்கு உலகில் விசேஷ அந்தஸ்தை ஈட்டியுள்ளது இந்தியா. இந்திய சர்க்காரும் மக்களும் இவ்விஷயத்தில் உறுதியான பணியாற்ற வேண்டும்.

"இனியொரு விதிசெய்வோம்—அதை எந்தநாளும் காப்போம்" என்றபடி பெருங் கொலை வழியாம் போர்வழி ஒழிந்து அருங்கலை வழியான சமரசப் பாதையில் பிரச்சினைகளை தீர்க்கும் உலக நியதியை நிலைநாட்ட இந்த மகாநாடு ஒரு கல்நாட்டு விழாவாகத் திகழ்வதாக.

## பாண்டி முனிசிபல் தேர்தலில் வெற்றி முழக்கம்

தான் ஆதரித்த மூன்று சுயேச்சையாளர்கள் உள்பட பாண்டி ராஜ்ய சட்டசபைக்கு மொத்தம் 19 ஸ்தானங்களில் ஜெயபேரிகை முழக்கிய மக்கள் முன்னணி, முனிசிபல் தேர்தல்களிலும் பிரமாத வெற்றிபெற்றுள்ளது.

பாண்டி ராஜ்யத் தலைநகரான பாண்டிச்சேரியில் மொத்தம் 18 முனிசிபல் ஸ்தானங்களில் 15 ஸ்தானங்களை மக்கள் முன்னணி கைப்பற்றியுள்ளது. எதிரிகளுக்கு ஒரு இடம் கூட விட்டுக்கொடுக்காமல் முதலியார்பேட்டை முனிசிபாலிட்டியில் மொத்தம் 12 ஸ்தானங்களையும் மக்கள் முன்னணி தன் வசமாக்கிக்கொண்டது. இதேபோல உழவர்கரையில் 12ல் 9 ஸ்தானங்களிலும், வில்லியனூரில் 12ல் 9 ஸ்தானங்களிலும் வெற்றிமுரசு கொட்டியுள்ளது. எனவே பாண்டிச்சேரி, முதலியார்பேட்டை, உழவர்கரை, வில்லியனூர் முதலிய நான்கு நகர முனிசிபல் நிர்வாகம் மக்கள் முன்னணி ஆட்சியின்கீழ் வந்துள்ளது.

மேலும் மண்ணடிப்பட்டில் மக்கள் முன்னணிக்கு 4 ஸ்தானங்களும், அரியாங்குப்பத்தில் 4ம், பாஹூரில் 3ம், நெட்டப்பாக்கத்தில் ஒன்றும் கிடைத்துள்ளன.

எனவே, பாண்டிச்சேரி பகுதியில் தேர்தல் நடைபெற்ற மொத்தம் 101 ஸ்தானங்களில் மக்கள் முன்னணி 57 ஸ்தானங்களுக்கு வெற்றிபெற்றிருக்கிறது. ஜில்லா காங்கிரஸ் 31 ஸ்தானங்களும், தேசிய காங்கிரஸ் 11 ஸ்தானங்களும், சுயேச்சையாளர் 2 ஸ்தானங்களும் கைப்பற்றியுள்ளனர்.

பாண்டிச்சேரி பகுதியில் முனிசிபல் தேர்தலில் மொத்தம் பதிவான 98,163 வாக்குகளில் மக்கள் முன்னணிக்கு 41,174 வாக்குகளும், அது ஆதரித்த இரண்டு சுயேச்சை களுக்கு 5,165ம் (ஆகமொத்தம் 46,339.) ஜில்லா காங்கிரசுக்கு 34,478ம், தேசியக் காங்கிரசுக்கு 17,346ம் கிடைத்துள்ளன.

(காரைக்கால் முதலிய இதர பகுதிகளின் விபரங்கள் இதில் சேர்க்கப்படவில்லை.)

28-7-55ம் தேதியன்று மிகச் சிறப்பான முறையில் மக்கள் முன்னணி வெற்றிவிழா கொண்டாடியது. இதன் விபரங்கள் பின்னர் வெளியிடப்படும்.




# கோவா விடுதலையும் காங்கிரஸ் தலைமையும்

சென்ற நானூறு ஆண்டுகளாக போர்ச்சுகீசிய ஏகாதிபத்தியத்தின் கீழ் அவதியுறும் இந்தியப் பிரதேசம் கோவா, இந்தியா விடுதலையடைந்து எட்டாண்டுகள் ஆகியும்கூட கோவாவை விடுவிக்க தகுந்த நடவடிக்கைஎடுக்காதிருப்பது இந்திய மக்களின் தேசிய கௌரவத்திற்கே முற்றிலும் விரோதமானது. அதுமட்டுமல்ல. இன்று இந்திய சுதந்திரத்திற்கும் ஆபத்தை விளைவிக்கக் கூடிய பிரச்சனை அது என்று பிரதமர் நேரு ஒப்புக்கொள்கிறார். ஏனென்றால் போர்ச்சுகீசிய ஏகாதிபத்தியத்துடன் பிரிட்டன் உட்பட மேற்கத்திய வல்லரசுகள் அட்லாண்டிக் கூட்டணியின் மூலம் நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளின் யுத்த தளமாக கோவா மாற்றப்படும் ஆபத்து உள்ளது. எனவே ஏகாதிபத்திய தளமாக கோவா மாறுவது இந்திய சுதந்திரத்திற்குப் பேராபத்தை விளைவிக்கும் என்பதை பிரதமர் நேரு உள்பட காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்த போதிலும் கோவா விடுதலைக்காக வெகுஜன சத்தியாக்கிரகம் பற்றி காங்கிரஸ் காரியக்கமிட்டி செய்துள்ள முடிவென்ன?

ஆகஸ்டு பதினைந்தாம் தேதி சகல கட்சியினரும் பங்கு கொள்ளும் கோவா விடுதலைக் கமிட்டியின் தலைமையின் கீழ் ஆயிரக்கணக்கில் கோவாவிற்குள் நுழைந்து சத்தியாக்கிரகம் செய்யவேண்டும், இந்திய தேசியக் கொடியை பறக்கவிடவேண்டுமென்று முடிவு செய்துள்ளது. நீசத்தனமான அடக்குமுறைகளைக் கண்மூடித்தனமாக கட்டவிழ்த்துவிடும் போர்ச்சுகீசிய ஆட்சியை விரட்டும் வழி பொதுஜன ஆர்ப்பாட்டம்தான் என்ற முடிவிற்கு வந்துள்ளது.

ஆனல் வெகுஜன சத்தியாக்கிரகம் கூடாதென்றும் அதில் காங்கிரஸ்காரர்கள் பங்கெடுத்துக் கொள்ளக்கூடாதென்றும் காங்கிரஸ் காரியக் கமிட்டி முடிவுகட்டியுள்ளது. போர்ச்சுகீஸ் அதிகாரிகளின் அக்ரமங்கள் அதிகரித்து வரும் இச்சமயத்தில், அதைத் தடுக்க இந்திய சர்க்கார் தீவிரமான நடவடிக்கை எடுக்க மறுக்கும் இச்சமயத்தில், போராட்டம் வலுவடைய வேண்டிய இச்சமயத்தில் வெகுஜன சத்தியாக்கிரகம் செய்வதை எதிர்க்க முன்வந்திருப்பது ஆச்சர்யமாகவே உள்ளது. கோவா விடுதலைக்காக போராட்டம் விரிவடைவதைக் காங்கிரஸ் தலைமை எதிர்ப்பது மிக மிகத் தவருனதென்பதை சகல தேச பக்தர்களும் உணர்வார்களென்றே நம்புகிறோம்.

காங்கிரஸ் தலைமை தனது போக்கை உடனடியாகத் திருத்திக் கொள்வது அவசியம். கோவா விடுதலை அவசியம் என்பதை உணரும் காங்கிரஸ், அந்த விடுதலை இயக்கத்தில் காங்கிரஸ்காரர்களும் பங்குகொள்ள அனுமதிப்பதே முறை. அதற்கு சகல உதவியும்தர முன்வருவதே முறை. சத்தியாக்கிரஹப் போராட்டம் மேலும் விரிவடைய சுதந்திர ஆர்வங் கொண்ட சகலரும் தங்களுடைய முழுப் பங்கையும் ஆற்ற முன் வரவேண்டும். மாருக அதற்கு இடையூருகப் பேசுவதோ அல்லது வெகுஜன சத்தியாக்கிரஹிகள் கோவாவிற்குள் நுழையும்போது அவர்களைத் தடுப்பதோ நமது தேசியப் பரம்பரைக்கும் தேசிய நலனுக்குமுகந்த போக்கு அல்ல என்று எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

இவ்விதப் போக்கு போர்ச்சுகீஸ் ஏகாதிபத்தியத் திமிர்த்தாண்டவத்தைத்தான் தீவிரப்படுத்தும் என்பதை காங்கிரஸ் தலைமை பார்க்கத் தவறக் கூடாது.

## தீவிர நடவடிக்கை தேவை

கோவா சத்யாக்கிரஹிகள்மேல் நீசத் தனமான தாக்குதல்களும் கொடுமைகளும் அதிகரித்துவரும் இன்று இந்திய சர்க்கார் கோவாவிற்குள் செல்லும் இந்திய ரயில்வேப் போக்குவரத்தை நிறுத்தவும் டெல்லியிலிருந்த போர்ச்சுகீஸிய ஸ்தானீகராலயத்தையும் மூடவும் நடவடிக்கை எடுத்துள்ளதை இந்திய மக்கள் அனைவரும் வரவேற்பர்.

இனிமேல் எடுக்கவேண்டிய நடவடிக்கைகளுக்கு இவை முதல் நடவடிக்கைகள் என்ற முறையில் வரவேற்கிறோம்.

பார்லிமெண்டில் பேசிய பிரதமர் நேரு கோவா ஒரு உள்நாட்டுப் பிரச்சனை என்பதை ஒப்புக்கொண்டார். இதில் வெளியார் யாரும் தலையிடுவதை அனுமதிக்க முடியாது என்ருர். போர்ச்சுகீசியத் துருப்புகள் இந்தியாவின் ஒரு பகுதியான கோவாவில் இருப்பது இந்தியாவின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதற்குச் சமமாகும் என்ருர். இவை யாவராலும் வரவேற்கப்படும் கருத்துக்கள். இவை உள்நாட்டுப் பிரச்சனை என்பதை ஒப்புக்கொள்ளும் பிரதமர் வெகுஜன சத்யாக்கிரஹத்தை எதிர்ப்பதுதான் ஆச்சர்யம்.

தோழர் ஏ. கே. கோபாலனும் மற்ற எதிர்க்கட்சித் தலைவர்களும் வற்புறுத்தியதுபோல் போர்ச்சுகீசிய கோவா ஆட்சிக்கு எதிராக பொருளாதார பகிஷ்காரத்தை யாவது உடனடியாகத் துவக்க வேண்டும். இன்றேல் பிரதமர் நேரு பேசிய தீவிரக் கருத்துக்கள் வெறும் பேச்சளவில்தான் நிற்கும்.

## விவசாயிகளுக்கு எதிராக செக்ஷன் 145

காங்கிரஸ் சர்க்கார் நிலச்சீர் திருத்தம்பற்றிப் பேசிக்கொண்டே எவ்வித நடவடிக்கையும் எடுக்காதிருப்பதால் விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்படுவது மிகத் தீவிரமாகிவருகிறது. இதைப் பற்றிப் பல செய்திகள் ஜனசக்தியிலும் மற்ற தினசரிப் பத்திரிகைகளிலும் வெளி வருவது அனைவருக்கும் தெரியும்.

நிலப்பிரபுக்கள் விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்ற பல புதியபுதிய முறைகளை எல்லாம் கையாளுகின்றனர். கிரிமினல் சட்டத்தின் 145 செக்ஷன் நிலவெளியேற்றத் தாக்குதலுக்கு இன்று தாராளமாக தமிழ்நாடு பூராவும் உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது.

ஒரு நிலத்தில் மற்றவர் பிரவேசிப்பதற்கு சப்-மாஜிஸ்டிரேட் தடைவிதிக்கும் செக்ஷன் இது. நிலத்தின் உரிமை சாசனத்தை கையில் வைத்திருக்கும் நிலப்பிரபுக்கள் அந்த சாசனங்களைக் காட்டிப் பரம்பரை பரம்பரையாக வரும் விவசாயிகள்மேல் 145-வது செக்ஷன் தடையுத்தரவு வாங்கி போலீஸ் உதவியுடன் விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்றுகின்றனர். வரப்போகும் நிலச்சீர்திருத்தம் தங்களைப் பாதிக்காமல் பாதுகாத்துக்கொள்ள ஏற்பாடுகள் இவை. நிலப்பிரபுக்களின் இன்றைய சதித் திட்டங்களுக்கு செக்ஷன் 145 இன்று பெரும் அளவு உதவி செய்கிறது.

நிலத்திலிருந்து வெளியேற்றுவது மகாபாபம், அதை உடனடியாகத் தடுத்துநிறுத்த வேண்டுமென்று கர்ஜித்தார் நேரு. ஆனல் கிரிமினல் சட்டத்தின் 145 செக்ஷனை உபயோகித்தே அந்த கொடிய 'பாபத்தை', நிலவெளியேற்றக் கொடுமையை நிலப்பிரபுக்கள் புரிகின்றனர்.

இது சென்னை சர்க்காருக்குத் தெரியாதென்று கூறமுடியாது. தெரிந்தும் இந்தக் குறுக்கு வழியை நிலப்பிரபுக்கள் கையாளுவதைத் தடுக்க நடவடிக்கை எடுக்காதிருப்பதேன்.

நிலப்பிரபுக்களின் இந்தப் புதிய தாக்குதல் கிரிமினல் சட்டத்தையும் அதன்பிரகாரம் நடவடிக்கை எடுக்கும் நீதி மன்றத்தையும் போலீசையும் உபயோகித்துக் கொள்ளுவதை சர்க்கார் தொடர்ந்து அனுமதிக்கப்போகிறதா? இந்த நயவஞ்சகத் தாக்குதலுக்கு சர்க்காரும் உடந்தைதானு என்று கேட்கிறோம்.

இல்லை என்ருல் செக்ஷன் 145ஐ உடனடியாகத் திருத்தி அவசரச் சட்டம் பிறப்பிக்கவேண்டும். வரப்போகும் நிலச்சீர்திருத்தத்திலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக இவ்விதம் கிரிமினல் சட்டத்தை உபயோகிப்பதை உடனடியாகத் தடுக்காவிட்டால், இந்தப் புதிய தாக்குதலுக்கு சென்னை சர்க்காரும் மனப்பூர்வமாக உடந்தையாக இருக்கிறது என்றுதான் மக்கள் முடிவுக்கு வருவார்கள்.

கே. எம்.

## சாந்தி நகர்
### ஆந்திர விவசாயிகள் சங்கம் உருவாக்கிய புது கிராமம்

நெல்லூர் ஜில்லா விவசாயிகள் சங்கக் காரியதரிசி ரமணய்யா கலெக்டரைக் காண வந்தார். சரி சரி! கோரிக்கைகள் குறைகளின் பட்டியல்தானு? என்று சம்பிரதாயமாகச் சடைத்துக் கொண்டார் கலெக்டர்.

ஆனல் விஷயம் வேறு. சாந்திநகர் கிராமத்தைத் திறந்துவைக்க அழைப்பு. கலெக்டர் பிரமிப்படைந்தார். பின் கலந்துகொள்ள ஒப்புக்கொண்டார்.

ஓர்ப்பள்ளி என்ற கிராமம் ஐம்பதாண்டுகளுக்குமுன் சீரழிந்து உருமாறிக் காடும் புதருமாகிவிட்டது. 1953ம் ஆண்டு எண்பத்து நான்கு ஏழை விவசாயிக் குடும்பங்கள் இந்த கிராமத்திற்குள் பிரவேசித்தனர். காடு களைந்தனர்; புதர்களை அகற்றினர்; இடையருத உழைப்பால் விளைநிலமாக்கினர்.

வளம் செழிக்கக் கண்டதும் நிலச்சுவான்களின் கழுகுக் கண்கள் அங்கே வட்டமிட்டன. பிரிவினைகளைப் புகுத்தி சீர்குலைக்க அவர்கள் முயன்றனர். ஆனல் உருக்குப் போன்ற கட்டுப்பாட்டால் உரமேறிய விவசாயிகள் கலங்கவில்லை. 1954க்குள் 500 ஏக்கர் பூமி சாகுபடிக்கு வந்துவிட்டது.

சர்க்கார் விவசாயிகளின் முயற்சிகளை அங்கீகரிக்க நேர்ந்தது. அவர்களுக்கு சாகுபடி உரிமையளிக்கப்பட்டது. வீடுகளுக்காக மனையிடம் ஒதுக்கப்பட்டு சிறுசிறு சுந்தரக் குடிசைகள் எழுந்தன. அழிவின் காட்சி மங்கி மயங்கி எழில் கொட்டும் இன்பக் கிராமம் எழுந்தது. கலெக்டர் திறப்பு விழாச் செய்தார். விவசாயிகள் சங்கத்தின் ஆக்கவேலைக்கு ஆதர்சமாகத் திகழ்கிறது சாந்தி நகர்.

# ஹிரோஷிமா தினம்

## ஆகஸ்ட் 6-ல் அனுஷ்டியுங்கள்

### விவசாயி சங்க அறைகூவல்

உலகிலுள்ள இதர சமாதானம் விரும்பும் சக்திகளுடன் சேர்ந்து ஆகஸ்டு 6-ம் தேதியை ஹிரோஷிமா தினமாக அனுஷ்டிக்க வேண்டுமென்று தஹுனுவில் நடைபெற்ற அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் மூன்ருவது மகாநாடு முடிவு செய்தது.

அணுகுண்டு யுத்தத்தின் பயங்கரமான விளைவுகளை ஹிரோஷிமா நமக்கு ஞாபகமூட்டுகிறது. சென்ற யுத்தத்தில் ஜப்பான்மீது அணுகுண்டு போட்ட சமயத்தில் இருந்த நிலைமையாது? முதல்தரமான சைன்யம் என்று கீர்த்திபெற்றிருந்த ஜப்பானிய குவான்டங் படைகளை மஞ்சூரியாவில் சோவியத் செஞ்சேனை தவிடு பொடியாக்கி விட்டது. பசிபிக் சமுத்திரத்தில் அமெரிக்கர்கள் முன்னேறி வந்தார்கள். யுத்தம் அனேகமாக இறுதி கட்டத்தை அடைந்துவிட்டது. இன்றோ, நாளையோ எந்த நிமிஷத்திலும் ஜப்பானியர் சரணகதியடையலாம் என்ற நிலைமை ஏற்பட்டது. இந்த சமயத்தில்தான் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் ஜப்பானிய நகரமான ஹிரோஷிமாமீது அணுகுண்டை வீசினார்கள். உலகாதிக்கத்திற்காக திட்டங்கள் வகுத்துக் கொண்டிருந்த அவர்கள் தங்களுடைய ராணுவ வல்லமையைக் காட்டி, உலக மக்கள் அனைவரையுமே பயபீதியில் ஆழ்த்த விரும்பினார்கள். இதற்காகத்தான் 1945-ம் வருடம் ஆகஸ்ட் 6-ம் தேதியன்று ஹிரோஷிமா மீது அணுகுண்டு எறிந்தார்கள். ஒரு சில விநாடிகளில் இந்தப் பெரிய நகரம் எரிந்து சாம்பலாயிற்று. 60,000 ஆண், பெண், குழந்தைகள் கொல்லப்பட்டார்கள். அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளின் ஆக்கிரமிப்பு நோக்கங்களின் சின்னமாக ஹிரோஷிமா விளங்குகிறது.

#### வாழ்வா—சாவா?

அணுகுண்டுகளுக்குப் பின் இப்பொழுது ஹைட்ரஜன் குண்டுகள் கண்டுபிடிக்கப்பட்டன. மனித குலம் பூராவும் வாழ்வதா அழிவதா என்ற புதிய பயமுறுத்தல் ஏற்பட்டிருக்கிறது.

அதிகார வெறிபிடித்த அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள், தங்களிடம் அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டுகள் உள்ளன என்ற திமிருடன் அனேக தேசங்களின் சுதந்திரத்திலும் அரசுரிமையிலும் தலையிட்டார்கள். கிரீஸ், கொரியா, பிலிப்பைன்ஸ், குவாடிமாலா, ஈரான், இந்தோசீனா, பிரான்ஸ், இத்தாலி, பாகிஸ்தான் முதலிய அனேக நாடுகளின் சுதந்திரத்திற்கெதிராக, இதற்குமுன் என்றுமே கண்டிராத வகையில் தீவிரத் தாக்குதல் தொடுத்திருக்கிறார்கள். பல நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிட்டு வருகிறார்கள். தேச விடுதலைப் போராட்டங்களை நசுக்குவதற்காக அனேகநாடுகளில் பிற்போக்காளர்களுக்கு உதவிபுரிகிறார்கள். கிழக்கத்திய நாட்டு மக்களுக்கு அபாயம் ஏற்படும் வகையில், தொடர்ச்சியாக அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டு சோதனைகளை நடத்தினார்கள். கொரியாவிலும், சீனாவிலும் அணுகுண்டுகளை வீசுவோம் என்று பகிரங்கமாகவே பயமுறுத்தினார்கள்.

இந்த அணுகுண்டு பயமுறுத்தலை அகற்றினாலொழிய, இவற்றின் உற்பத்திக்கும் உபயோகத்திற்கும் தடை விதித்தாலொழிய, உலக சமாதானத்திற்கும், சுபீட்சத்திற்கும் உத்தரவாதமில்லை.

எனவே, இந்தக் கடமையில் வெற்றி பெறுவதற்காக மனித குலம் பூராவும் ஒன்றுபட வேண்டும்.

#### ஆக்கவேலைக்கு அணுசக்தி

பிரம்மாண்டமான அணுசக்தியை சமாதானபூர்வமாக ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்தலாம். பெரும் பெரும் அணைக்கட்டுகள் கட்டுவதிலும், மின்சாரம் உற்பத்திசெய்யவும் சோவியத் யூனியனில் அணுசக்தி உபயோகப்படுத்தப்படுகிறது. அணுசக்தியை ஆக்கவேலைகளுக்குப் பயன்படுத்தும் மகத்தான வாய்ப்புகள் உள்ளன என்பதை சோவியத் உதாரணம் சுட்டிக் காட்டுகிறது. மனித முன்னேற்றமும், நாகரீகமும் வெகுதூரம் வளர்ச்சியடைவதற்கு இது உதவும்.

அணு ஆயுத உற்பத்தியைத் தடை செய்யவேண்டுமென்றும், இன்று கையிலுள்ள ஆயுதங்களை அழித்துவிடவேண்டுமென்றும் சமாதானம் விரும்பும் மனித குலம் பூராவும் கோருகிறது. இதற்கான சக்திமிக்க இயக்கம் ஏற்கனவே கணிசமான வெற்றிகளைப் பெற்றிருக்கிறது. கொரியாவில் அணுகுண்டை வீசவிடாமல் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளை அது தடுத்துநிறுத்தியது. கையிருப்பிலுள்ள ஆயுதங்களை அழித்துவிடவேண்டும், உற்பத்தியைத் தடைசெய்யவேண்டும் என்ற கோரிக்கைகளை ஏகாதிபத்திய நாடுகள் ஒப்புக்கொள்ளும் வரையிலும், இந்த இயக்கத்தை மென்மேலும் பலப்படுத்தவேண்டும்; மேலும் முன்கொண்டு செல்லவேண்டும்.

#### சிறப்பாகக் கொண்டாடுக!

எனவே, இந்தியாவின் இதர பாகங்களிலுள்ள விவசாயிகளுடனும், சமாதானம் விரும்பும் சகல இந்திய மக்களுடனும் சேர்ந்து தமிழ்நாட்டு விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் இந்தப் புதிய அபாயத்திற்கெதிராகக் குரல் எழுப்பவேண்டும்; இதை எதிர்த்துப் போராட முன்வர வேண்டும். இந்தக் கீர்த்திமிக்க பணியில் தமிழக விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் பின்தங்கி யிருக்கக்கூடாது.

ஆதலால் எல்லா இடங்களிலுமுள்ள விவசாய சங்கக் கிளைகள் ஆகஸ்ட் 6ம் தேதியை ஹிரோஷிமா தினமாக மிகச் சிறந்த முறையில் அனுஷ்டிக்கவேண்டும். இந்த தினத்தை அனுஷ்டிப்பதற்காக முன்கூட்டியே தக்க தயாரிப்புகள் செய்யவேண்டும். இதர ஸ்தாபனங்களுடன் சேர்ந்து, அத்தினத்தன்று ஊர்வலங்களும், பொதுக்கூட்டங்களும் நடத்தவேண்டும். அணுகுண்டுகளைத் தடை செய்யவேண்டுமென்றும், கையிருப்பிலுள்ள குண்டுகளை அழித்துவிடவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றுக!

அணுகுண்டைத் தடைசெய்ய வேண்டுமென்ற உலக சமாதானக் கௌன்சிலின் விண்ணப்பத்தில் எல்லா விவசாய சங்கக் கிளைகளும் கையெழுத்து வாங்குங்கள்.

—பி. ஸ்ரீனிவாச ராவ்

# உயிர் கொடுத்த அன்னையர்

## உவந்து வந்து காப்பரே

### உலகத் தாய்மார்கள் சம்மேளனம்

ஜூலை ஏழாந்தேதி—லட்சோப லட்சம் மக்கள் உள்ளங்களிலே பசுமையுடன் திகழும் நாள்—பரவசமூட்டும் நாள். அன்றுதான் ஸ்விட்சர்லாந்தைச் சேர்ந்த எழில்மிக்க லாஸேன் நகரில் உலகத் தாய்மாரின் சம்மேளனம் நடைபெற்றது.

லெமான் ஏரியின் கரையிலே, அணி செய்யும் மணி மண்டபம். 'உயிரளித்த அன்னையர்'—அதை உவந்து காக்க விழைகிறார் என்ற கோஷம் பல்வேறு மொழிகளிலும் தீட்டப்பெற்று மண்டபத்தின் சுவர்களிலே காட்சியளித்தது. தங்க மதலை ஒன்றைத் தாங்கித் தழுவிய தாய் ஒருத்தி ஜீவகளை சொட்ட நிற்பது போன்ற ஓவியம் முன்வாயிலை அலங்கரித்தது.

லட்சோப லட்சம் தாய்மார்களைப் பிரதிநிதித்துவப் படுத்தும், சுமார் 2,000 பேர்கள் அறுபது நாடுகளின் சார்பில் இந்த மகாநாட்டில் கலந்துகொண்டார்கள்.

தலைமைக் குழுவில் யுத்த நாசத்தை ஜீவிய அனுபவத்தில் கண்ட தாய்மார் பலர் பணியாற்றினர்.

"யுத்தம் தவிர்க்க முடியாதது என்பதை இன்று தாய்மார் ஏற்க மாட்டார்கள்" என்று உலக ஜனநாயக மாதர் சம்மேளனத்தின் தலைவி ஸ்ரீமதி யூஜினி காட்டன் முழக்கம் செய்தார். யுத்தத்திற்கு

## மாதர் பகுதி

எதிராக ஒரு மகத்தான சக்தியாக இம் மகாநாடு உடலெடுக்க வேண்டும். குழந்தைகளைப் பாதுகாக்கும் கொத்தளமாகத் திகழவேண்டும் என்று அறைகூவினர்.

இன்று ஒரு குழந்தைக்கு அது வெள்ளை நிறத்ததோ, கறுப்பு நிறத்ததோ, மஞ்சள் நிறத்ததோ ஏதாக இருப்பினும் வாழும் உரிமை உண்டு. உயிர் கொடுத்த அன்னையர் அதை உவந்து காக்கப் பிரதிக்ஞை செய்யவேண்டும் என்றார்.

#### உருக்கமாக

யுத்தகால அட்டூழியங்களை, நாசத்தை-கோரத்தை அன்னையர் பலர் உள்ளம் உருக உருக்கமாக வர்ணித்தனர். நெஞ்சு குமுறச் செய்யும் நிகழ்ச்சிகளைச் சித்தரித்தனர்.

அணைக்கும் அன்புக் கரம் – கடல் – மலை – காடு – நாடு – நிறம் என்ற சகல எல்லைகளையும் கடந்து விரிந்து செல்லும் ஒன்று என்பதைப் பரவசத்துடன் கூறினார்கள்.

இன்று உலகில் யுத்தத்தைக் கட்டவிழ்த்து விடச் சதிசெய்யும் வெறியர்களை விடத் தங்கள் கண்ணின் மணிகளான செல்வக் குழந்தைகளைப் பாதுகாக்கவேண்டும் என்று விழையும் சக்தி பலமானது என்று ஸ்ரீமதி காட்டன் குறிப்பிட்டார்.

நாட்டின் செல்வத்தைச் சாவிற்கு அர்ப்பணிக்கும் வழியில் அழிவு ஆயுதங்கள் அணுகுண்டு ஹைட்ரோஜன் குண்டுகள் செய்து விரயமாக்காமல், பள்ளிக்கூடங்கள, ஆஸ்பத்திரிகள், குழந்தைகளின் விளையாட்டு மண்டபங்களைக் கட்டலாமே! பட்டினியால் மடியும் மனித குலத்திற்கு உணவு கொடுக்கலாமே என்று குறிப்பிட்டபோது மண்டபம் அதிர கரகோஷங்கள் எழுந்தன.

#### முடிவுகள்

அடக்குமுறைகளை எதிர்த்துத் தொல்லை பல சகித்துக்கொண்டு இந்த சமாதானத் தொண்டில் ஈடுபட்டிருக்கிறோம் என்று அமெரிக்காவிலிருந்து வந்த தாய் ஸ்ரீமதி டெய்லர் கூறினார்.

பிள்ளைக் கனியமுதும் பேசும் பொற்சித்திரமுமான சிறு குழந்தைகள் தலைமைக் குழுவினர்க்கு மாலைகள் சூட்டிய காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

இம் மகாநாடு வெற்றி பெற வேண்டுமென்று வாழ்த்துத் தெரிவித்து, ஸ்பானிய விடுதலை இயக்கத்தின் தலைவி லா பஸ னேரியா, ஸ்ரீமதி பால் ரோப்ஸன், ஸ்ரீமதி ஸன் யாட் ஸன், ஸ்ரீமதி ராமேச்வரி நேரு, ஸ்ரீமதி விஜய லக்ஷ்மி பண்டிட், ராஜகுமாரி அமிருத கௌரி, பெல்ஜியம் ராணி மாதா ஆகியோர் செய்திகள் அனுப்பி யிருந்தார்கள்.

அகிலத்தின் அன்னையருக்கு ஒரு வேண்டுகோள். ஐ. நா. ஸ்தாபனத்திற்கு ஒரு கடிதம், நான்கு வல்லரசுகளின் தலைவர்களுக்கு ஒரு செய்தி இவை அனுப்பப்பட்டன.

அணுகுண்டு ஹைட்ரோஜன் குண்டு ஆயுதங்களை உற்பத்தி செய்தல், சோதனை நடத்தல் இவற்றைத் தடை செய்யும் ஓர் உடன்பாடு ஏற்படக் கோரி தீர்மானமும் நிறைவேறியது.

### இந்தியாவுக்கு செக் விமானம்

இந்தியப் பிரதமர் பண்டித நேருவுக்கு செக்கோஸ்லோவேகியா சர்க்கார் அன்பளிப்பாக அளித்துள்ள விமானம், இந்தியாவுக்கு 4-7-55ல் வந்துவிட்டது. அது 2 இன்ஜின்களையுடையது. 4 பேர் உட்காரலாம். அதன் பெயர் Aero-45

### புதிய அலை!

இந்த உலகத்தின் ஊடே புதியதோர் அலை, வீசியடித்துக் கொண்டிருக்கிறது. அது மனிதர்களின் மனதிலும் தேசங்களின் மனதிலும், பதிகிறது. இம்மாதிரி அலை, நான் சென்று பார்த்த ஒவ்வொரு தேசங்களின் குறுக்கும் நெடுக்கும் ஓங்கி வீசுவதைக் கண்டேன். இந்த அலை வீச்சினுல் எட்டிப் பிடிக்க முடியாத பகுதி, இந்த உலகத்தில் எதுவுமே இல்லை. இனிமேல் எந்த யுத்தமும் கூடாது, இவ்வுலகில் சச்சரவே கூடாது என்று லட்சோப லட்சக்கணக்கான மக்களின் மனதிலே கிளர்ந்தெழும் நம்பிக்கையையும் இதய ஆசைகளையும் இந்த அலை தன்னுட்கொண்டிருக்கிறது.

—நேரு

## வரவேற்பு தனி நபருக்கல்ல இந்திய மக்களுக்கே

### பிரதம மந்திரி நேரு கூறுகிறார்

"மீண்டும் சொல்லுகிறேன். சோவியத் யூனியன் செக்கோஸ்லோவேகியா, போலந்து, ஆஸ்திரியா, யூகோஸ்லோவியா, பிரிட்டன், ஜெர்மனியில்கூட, நான் பெற்ற மகோன்னதமான வரவேற்புகள், தனிநபர் என்ற முறையில் எனக்களித்த வரவேற்புகள் அல்ல. இந்தியாவில் கடைப்பிடிக்கப்பட்டுவந்த சமாதானக் கொள்கைக்கு அளிக்கப்பட்ட வரவேற்புகளாகும். இந்தியாவுக்கு அளிக்கப்பட்ட கௌரவத்துக்கு மாபெரும் காரணம் என்ன? மக்களின் இதயம் சமாதானத்தை நாடிக்கொண்டிருந்த போது, இந்தியா சமாதானக் குரலை எழுப்பிற்று. உலகத்தின் காதுகள் அதைக் கேட்பதற்குக் கவிழ்ந்தபோது, சந்தர்ப்ப வசத்தால், அந்தக் குரலை எழுப்பும் கருவியாக விளங்கினேன்; அவ்வளவுதான்.

#### மகத்தான பொறுப்பை நிறைவேற்றுவோம்

இவ்வரவேற்புகளும் நம்பிக்கையும், இந்திய சர்க்கார்மீதும், குறிப்பாக அதிகமாக இந்திய மக்கள் மீதும் மகத்தான பொறுப்பைச் சுமத்தியுள்ளன. ஏனென்றால், ஐரோப்பிய மக்களும் இதர தேச மக்களும் காட்டிய மரியாதையானது இந்திய மக்கள் சில காரியங்களைச் செய்யவேண்டுமென்று கோருகின்றன. அவர்கள் எதிர்பார்ப்பனவற்றை இந்தியா நிறைவேற்றாவிட்டால், இந்திய மக்கள் மீது கொண்டுள்ள நம்பிக்கையும் போய்விடும்."

...நேரு.

## வெளிநாட்டுக்கு ஒரு குரல் உள்நாட்டுக்கு ஒரு குரலா?

### பிரதமர் நேருவின் கேள்வி

இந்தியாவின்பால் வெளிநாட்டு மக்கள் காட்டிவரும் மரியாதையும், கௌரவமும் இந்திய மக்கள் மீது பெரும் பொறுப்பைச் சுமத்தியுள்ளன. சர்வதேசத் துறையில் நாம் மேற்கொண்டிருக்கும் பொறுப்புகள் அனைத்தையும் ஞாபகப்படுத்திக்கொண்டு, அதற்கேற்ப நடந்துகொள்ளவேண்டும். அதுமட்டுமல்ல. லட்சோப லட்சக்கணக்கான மக்கள் நம்மீது வைத்திருக்கும் நம்பிக்கையையும் ஆசைகளையும் நியாயப்படுத்தும் முறையில், நாம் நம்முடைய நாட்டின் உள் விவகாரங்களையும் வெளி விவகாரங்களையும் நடத்த வேண்டும். வெளிநாட்டுக்கு ஒரு குரலும் நம் உள்நாட்டுக்கு வேறு குரலுமாக நாம் பேசவேண்டுமென்று நினைக்கவே முடியாது. மற்றவர்களுக்கு உபதேசம் செய்வது மிக எளிது. ஆனால் அதை உங்களுடைய உள் விவகாரங்களில் நடத்திக் காட்டுவது மிகவும் கடினம்" என்று டெல்லி நகரசபை தந்த வரவேற்பிற்குப் பதிலளிக்கையில் 16-7-55 பிரதமர் நேரு பேசினார்.

# திட்டம் வெற்றிபெற

## அதிகாரிகள் திருந்தவேண்டும்

### ரயில்வே லேபர் யூனியன் தீர்மானம்

தமிழகத் தொழிலாளி வர்க்க சரித்திரத்தில், தனிப் பெரும் பெருமையும், தேசபக்த பரம்பரையும் உள்ள பொன்மலை தென்பிராந்திய ரயில்வே லேபர் யூனியன் மத்திய நிர்வாகக் கமிட்டிக் கூட்டம், தலைவர் எம். கல்யாண சுந்தரம் எம். எல். ஏ. தலைமையில், ஜூலை 16, 17 தேதிகளில் ஈரோட்டில் நடைபெற்றது.

யூனியன் நிர்வாகிகளும், மத்திய நிர்வாக கமிட்டி அங்கத்தினர்கள் 60 பேரும், ரயில்வேயின் ஒவ்வொரு தொழில் பகுதியிலிருந்தும் பிரதிநிதிகளாக 100 பேர்களும் சரித்திரப் பிரசித்தி பெற்ற இக் கூட்டத்தில் பங்கு கொண்டார்கள்.

ஆரம்பத்தில், மறைந்த தலைவர் ஸ்ரீ என். எம். ஜோஷிக்கு வணக்கம் செலுத்தினார்கள். தலைவர் கல்யாணசுந்தரம் பேசுகையில், "மார்ச் 15 கோரிக்கை தினம் தெ. பி. ரெயில்வே முழுவதும் வெகு உற்சாகத்துடன் கொண்டாடப்பட்டதிலிருந்து, 12 அம்ச கோரிக்கை சாஸனத்துக்கு தொழிலாளர்கள் எவ்வளவு ஆதரவு தருகிறார்களென்று தெரிய வருகிறதென்று குறிப்பிட்டதுடன், ஐரோப்பாவுக்கு விஜயம் செய்து திரும்பிய பிரதமர் நேருவின் சமாதான முயற்சிகளை விவரமாகக் கூறி, வரவேற்று, முழு ஆதரவு அளிப்பதாகவும் கூறினார். தலைவர் மேலும் பேசுகையில்:

#### திட்டம் வெற்றிபெற

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், தேச நிர்மாணம், அபிவிருத்தி ஆகிய விஷயங்களில் ரயில்வேக்கு முக்யத்வம் அளித்திருப்பதால், ரயில்வே தொழிலாளர்கள் அனைவரும் அப்பகுதியை ஆதரிக்க தயாரா யிருப்பார்கள். திட்டம் வெற்றிபெறுவதற்கு, பலன் தரும் அம்சமாக இருக்கக் கூடிய தொழிலாளர்களுக்கும் அதிகாரிகளுக்குமிடையே நெருங்கிய நல்லுறவுகள் ஏற்படாவண்ணம், லேபர் யூனியன் அளிக்கும் ஒத்துழைப்பை அரசியல் பாரபட்சம் காரணமாக அதிகாரிகளும் ரயில்வே மந்திரிகளும் மறுக்கிறார்கள். தென் இந்திய ரயில்வேயில் மிகப் பெரிய அளவில் தொழிலாளரின் ஆதரவைக் கொண்ட நமது யூனியனை அங்கீகரிக்க மறுப்பதும் அதே பாரபட்சத்தினால்தான்! திட்டத்தை உருவாக்கியதும், அதற்கு பணத்தைச் சேகரிக்கும் விதமும் போதுமானதல்ல. திட்டத்தின் வெற்றிக்காகத் தொழிலாளர்கள்பால் அதிகாரிகள் நடந்துகொள் ளும் முறையில் மாறுதல் ஏற்படவேண்டும்.

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் சம்பந்தமாக லேபர் யூனியனின் ஆக்கபூர்வமான நோக்கத்தைப்பற்றி டில்லியில் உயர்தர அதிகாரிகளிடம் பேசுவதற்கு லேபர் யூனியன் நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்" என்றார்.

20 கிளைச் சங்கங்களிலிருந்து வந்த பிரதிநிதிகள் கோரிக்கைகளை விளக்கி உற்சாகமுடன் பேசிய பிறகு, ரெயில்வே தொழிலாளர்களுடையவும், ரெயில்வே பிரயாணிகளுடையவும் கோரிக்கைகளடங்கிய தீர்மானங்கள் நிறைவேறின.

#### பொதுக்கூட்டம்

அன்று மாலை ரெயில்வே காலனியில் தெ. பி. ரெ. லேபர் யூனியன் உப-தலைவர் தோழர் ஜே. பி. புருஷோத்தம் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடந்தது. அதில் தோழர்கள் எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ., கே.டி.கே. தங்கமணி, கே. அனந்த நம்பியார் எம்.பி., கே.டி. ராஜு எம்.எல்.ஏ. முதலியவர்கள் பேசினார்கள். மாலையில் ஓர் மாபெரும் ஊர்வலமும், இரவில் 5000 பேர் கண்டு களித்த புதுவாழ்வு என்ற கலா நிகழ்ச்சியும் நடைபெற்றது.

#### அடுத்த மகாநாடு

வருகிற அக்டோபர் மாதத்தில் தெ. பி. ரெ. லேபர் யூனியன் மகாநாட்டை பொன்மலையில் கூட்டுவதென்றும், அதற்காக 15000 ரூபாய் வசூலிப்பதென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# பழிவாங்குவதை எதிர்த்து

## புகையிலைத் தொழிலாளர் ஸ்ட்ரைக்

## புதுக்கோட்டையில் வெற்றி

புதுக்கோட்டை நைஜாம் லேடி புகையிலைக் கம்பெனி முதலாளி அப்துல் ரஹ்மான் ராவுத்தர், தொழிலாளர்களைப் பழிவாங்குவதில் புலி என்று பேர் எடுக்கவிரும்புகிறார். தொழிற் சங்க ஊழியர்கள் என்ற காரணத்துக்காக சிங்கமுத்து, சோமன், ஹனிபா, மூக்கையா, சின்னச்சாமி, ஆகிய 5 தொழிலாளர்களை இம்மாத ஆரம்பத்தில் திடீரென்று பழிவாங்கி விட்டார்.

இந்த அக்ரமத்தைக் கண்டித்து 12–7–55 முதல் அந்தக் கம்பெனியில் வேலைசெய்யும் 100 தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் செய்தார்கள்.

சகோதர தொழிலாளர்களும் பொதுமக்களும் தரும் ஆதரவினால் உற்சாக மூட்டப்பட்டு தினசரி ஊர்வலங்களும் ஆர்பாட்டங்களும் நடந்தன. மறுநாள் லேபர் ஆபீஸர் தலையிட்டு, தொழில் தகராறு சட்டம் 33வது செக்ஷனுக்கு விரோதமாக நடந்துகொண்ட முதலாளியைக் கண்டித்து, நடவடிக்கை எடுக்கப் போவதாகக் கூறியதின்பேரில், 5 பேர்களையும் வேலைக்கு எடுத்துக்கொண்டார் முதலாளி.

இதுபோல் பெல்மார்க் கம்பெனியில் பழிவாங்கப்பட்ட ஆறுமுகமும், வி. வரதராஜுவும் வேலைக்கெடுத்துக்கொள்ளப்பட்டனர்.

#### ராஜேஸ்வரியில்

மதுரை ராஜேஸ்வரி வீவிங் மில்லில் பழிவாங்கப்பட்ட 6 பேர்களையும், பஞ்சாலை சங்க தலையீட்டின் பேரில் மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

# அகில இந்திய சிமிண்டு தொழிலாளர் சம்மேளனத்தின்

## 5-வது மகாநாடு

அ. இ. சிமிண்டு தொழிலாளர் சம்மேளனத்தின் 2-வது மகாநாடு ஹைதராபாத் ராஜ்யத்திலுள்ள ஷாபாத் நகரில் ஜூலை 16, 17 தேதிகளில் டால்மியாபுரம் சிமிண்டு தொழிலாளர் சங்கத் தலைவரும், சம்மேளனத் தலைவருமான ஸ்ரீ எம். பழனியாண்டி எம். எல். ஏ. தலைமையில் வெகு சிறப்பாக நடைபெற்றது.

மதுக்கரை, டால்மியாபுரம், குண்டூர் ஜில்லாவிலுள்ள கிருஷ்ணா பாக்டரி, பம்பாய் அசோஷியேடட், விஜயவாடா விலுள்ள ஆந்திரா சிமிண்டு கம்பெனி, ஷாபாத் தொழிற்சங்கம், பூபேந்திரா கம்பெனி (பெப்சு) ஆகிய தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகள் மகாநாட்டில் கலந்துகொண்டனர்.

திருவாங்கூர், தாழையூத்து, போர்பந்தர் ஆகிய சங்கங்களிலிருந்துவந்த வாழ்த்துச்செய்திகள் வாசிக்கப்பட்டன.

தமிழ்நாட்டிலிருந்து ஸ்ரீ எம். பழனியாண்டி எம்.எல்.ஏ.யும் சம்மேளன உபதலைவர் தோழர் கே. ஆர். ராமசாமி (மதுக்கரை) யும் வந்திருந்தார்கள்.

அடிப்படைச் சம்பளம் ரூ. 35, பஞ்சப்படி புள்ளிக்கு 4 அணா, பஞ்சப்படியில் பாதியை சம்பளத்துடன் சேர்க்கவேண்டும்.

ஆள்குறைப்பையும் வேலைப் பளுவையும் திணிக்கும் ரேஷனலைசேஷனை நிறுத்தவேண்டும்.

தொழிற்சங்க ஊழியர் என்ற காரணத்துக்காக பூபேந்திராவில் தொழிற்சங்க நிர்வாகஸ்தர்கள் 21 பேரும் பழிவாங்கப்பட்டிருக்கிறார்கள். ஷாபாத்திலும் தாழையூத்திலும் சங்க காரியதரிசிகளும், மதுக்கரையில் முக்கிய ஊழியர்களும் பழிவாங்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்.

பம்பாய் அசோஷியேடட் கம்பெனியார் தொழிலாளர்களுக்கென வீடுகள் கட்டிக்கொடுத்திருக்கிறார்கள். அக்காலனிகளில் தொழிற்சங்க வேலை செய்கிறவர்களைப் பழிவாங்குகிறார்கள். இதை உடனே நிறுத்தவேண்டும்.

போனஸ்பற்றி சுப்ரீம் கோர்ட் முடிவை கண்டித்தும்—அகில இந்திய ரீதியில் சிமிண்டு தொழிலாளர் சம்மேளனத்துக்குத்தான் அதிக செல்வாக்கு இருந்தும், அதைப் பரிசீலிக்கக்கூட முன்வராமல் அதை அங்கீகரிக்க மறுப்பதைக் கண்டித்தும்—ஹைதராபாத் முக்கூட்டுக் கமிட்டியில் ஏகமனதாக ஒப்புக்கொள்ளப்பட்ட தீர்மானங்களை முதலாளிகள் அமுல்நடத்த உடனடியாக சர்க்கார் தலையிடவேண்டுமென்றும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

# தமிழ்நாடு நகரசுத்தி தொழிலாளர் மாநாடு

## மதுரைக்கு அணி அணியாக திரண்டு வாரீர்!

தமிழ்நாடு நகரசுத்தி தொழிலாளர் மகாநாடு, மதுரை மா நகரில் ஆகஸ்டு 6, 7 தேதிகளில் நடைபெறவிருக்கிறது. மகாநாட்டைச் சிறப்புற நடத்த வரவேற்புக் கமிட்டியார் தீவிரமாய் முனைந்திருக்கிறார்கள்.

ஒவ்வொரு நகரசுத்தி தொழிலாளர் சங்க ஊழியர்களும் தொழிலாளர்களும் கடந்த ஏப்ரலில், பிரதிநிதிகள் கூடி தயாரித்த கீழ்க்கண்ட நகல் தீர்மானங்கள் மீது விரிவாக விவாதம் செய்து மதுரைக்கு வரவேண்டுமாய் வரவேற்புக் கமிட்டியார் கேட்டுக் கொள்ளுகிறார்கள்.

#### நகல் தீர்மானங்கள்

**சம்பளம்:** நாள் ஒன்றுக்கு ஒரு தொழிலாளிக்கு 1 ரூபாய் என்ற விகிதத்தில் மாதம் 30 ரூபாய் அடிப்படைச் சம்பளம் வேண்டும்.

**பஞ்சப்படி:** யுத்தகாலத்தை விட 4 மடங்கு விலைவாசி உயர்ந்திருப்பதால் பஞ்சப்படி 25 ரூபாய் வேண்டும்.

**சம்பள உயர்வு:** வருஷத்துக்கு ரூ. 1 சம்பள உயர்வு வேண்டும்.

**வீட்டு வாடகை:** சேரி ஒழிப்பு பற்றி அரசாங்கம் பேசிக்கொண்டிருக்கிறது. ஆனால் நகரசுத்தி தொழிலாளருக்கு வீடு கட்டிக் கொடுக்காமல், குப்பை மேட்டில் குடிசை கட்டி வாழவேண்டிய நிலைமையில் வைத்திருக்கிறார்கள். ஆகவே உடனடியாக வீடு கட்டிக் கொடுக்கவேண்டும். அதுவரை வீட்டு வாடகை அலவன்ஸ் மாதம் ரூ. 5 தரவேண்டும்.

**லீவு வசதி:** இன்று 24 நாட்கள் வேலை செய்தால் 1 நாள் லீவு என்ற சம்பாதிக்கும் (Earned Leave) லீவு முறை அமுலில் இருக்கிறது. இது லீவு கொடுக்கும் அதிகாரிக்கும், லீவு எடுக்கும் தொழிலாளிக்கும் கணக்குப் போடுவதில் பல கஷ்டங்கள் ஏற்படுகிறது. படிக்கத் தெரியாத பாமரத் தொழிலாளி, இதில் ஏமாற்றப்படுகிறான். ஆகவே சம்பாதிக்கும் லீவு முறையை மாற்றி, காசுவல் லீவு முறையை அமுலாக்கவேண்டும்.

சர்க்கார் விடுமுறை நாட்களில் குமாஸ்தாக்களுக்கும் அதிகாரிகளுக்கும் லீவு கிடைக்கிறது. நகரசுத்தி தொழிலாளர்களுக்குக் கிடையாது. இந்தப் பாரபட்சத்தை மாற்றி, எல்லா சர்க்கார் விடுமுறை நாட்களிலும் தொழிலாளர்களுக்கு (பொது மக்களின் சுகாதாரத்தை முன்னிட்டு) ½ நேரம் லீவு கொடுக்கவேண்டும்.

**நிரந்தரமாக்குவது:**—அறிவு நுட்பமான வேலை(Skillful work)கள் செல்பவர்கள்கூட 3 மாதத்தில் நிரந்தர தொழிலாளியாக்கப்படுகிறார்கள். ஆகவே உடல் உழைப்பு தொழிலாளர்களாகிய நகர சுத்தி வேலை செய்பவர்களை 6 மாதத்தில் நிரந்தரமாக்கவேண்டும்.

**பிராவிடெண்டு பண்டு:** இதர தொழிலாளர்களுக்கு சேவிங்ஸ் பண்டு முறையை மாற்றி பிராவிடெண்ட் பண்டு முறை அமுலில் இருக்கிறபடியால் நகர சுத்தி தொழிலாளர்களுக்கும் அதுபோல் போனஸ் பண்டு முறையை மாற்றி பிராவிடெண்ட் பண்டு முறை அமுலாக்கவேண்டும்.

**உடை:** ஆண்களுக்கு வருஷத்துக்கு 2 டவுசர், 2 சட்டை 2 ஜோடி செருப்பு, 2தலைப் பாகையும், பெண்களுக்கு 2 சேலை, ரவிக்கை, 2 ஜோடி செருப்பும் கொடுக்கவேண்டும்.

**ரிட்டயர்மெண்ட்:** வயதான காலத்தில் மற்ற தொழிலைப்போல இதில் புத்தி கூர் மழுங்கி வேலையில் தவறுதல் ஏற்படப் போவதில்லை. ஆகவே வேலை செய்ய சக்தி உள்ள நகர சுத்தி தொழிலாளர்களை வேலை செய்ய அனுமதிக்க வேண்டும். அதிக வயதை காரணம் காட்டி நிறுத்தக் கூடாது.

இவர்களுக்கு பென்ஷன்முறை இல்லாததால், பிற்கால நன்மைக்காக வருட சர்வீஸுக்கு ½ மாத சம்பளம் வீதம் ரிட்டயர்டுமென்ட் நிவாரணமாக அளிக்கவேண்டும்.

**வேலைப்பளு:** 24–4–42 G. O. 46640ல் உள்ள சென்னை பொது சுகாதார அதிகாரியின் வேலை நிர்ணய சிபார்சை அமுல் நடத்த வேண்டும்.

மற்றும் குழந்தைகளுக்கு இலவசக் கல்வியும் மத்தியான சாப்பாடும் வேண்டும்—இலவச வைத்திய வசதி—மேஸ்திரி, பியூன் போன்ற வேலைகளுக்கு நகரசுத்தி தொழிலாளர்களையே நியமிக்க வேண்டும்.

**தொழில் கோர்ட்:** மே. வங்கம், பிகார், ஹைதராபாத் ராஜ்யங்களில் இத் தொழில் பிரச்னைகளை கோர்ட்டுக்குவிட்டு முடிவு கட்டுகிறார்கள். அதுபோல சென்னை ராஜ்யத்திலும் தொழில் தகராறுகளைக் கோர்ட்டுக்கு விட்டு முடிவு கட்டவேண்டும்.

**முக்கூட்டுக் கமிட்டி:**—பஞ்சாலை, மோட்டார் தொழில்கள்போல, நகரசுத்தி தொழிலாளர் நிலைமையையும் பரிசீலனை செய்ய முக்கூட்டுக் கமிட்டி அமைக்கவேண்டும்.

**சங்க அங்கீகாரம்:** தொழிற் சங்கச் சட்டப்படி ரிஜிஸ்டர் செய்யப்பட்ட சங்கத்தை அங்கீகாரம் செய்யவேண்டும்.

மேற்கண்ட நகல் தீர்மானங்களை விரிவாக விவாதித்து தக்க ஆலோசனைகளுடன் பிரதிநிதிகள் வருவார்களாக!

# உப்பிலிப்பாளையம் தியாகி முத்துவின்

## மறைவு தின விழா

தோழர் முத்து, கோவை கோத்தாரி மில் ஸ்பின்னிங் தொழிலாளி. உப்பிலிப்பாளையத்தில் வசித்து வந்தார். மில் தொழிலாளர் சங்க ஊழியர். கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர். நமது ஜனசக்தி ஏஜண்டு. தொழிலாளர்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்துவதிலும், அவர்களது போராட்டங்களில் முன்னணியில் நிற்பதும் தோழர் முத்துவின் தனிப்பெரும் குணங்கள்.

தொழிலாளி வர்க்க ஒற்றுமையை வெறுத்து, தொழிலாளரிடையே சகோதரச் சண்டையை ஏவிவரும் கோஷ்டியினரின் தூண்டுதல் காரணமாக, 1954 ஜூலை 7-ம் தேதி, கோத்தாரி மில்லுக்குள்ளேயே குத்திக் கொலை செய்யப்பட்டார் தோழர் முத்து.

அவருக்கு ஒரு மனைவி, இரண்டு ஆண்டு குழந்தைகள், வயதான தாய் தந்தையர், தமையன் ஒருவரும் உண்டு.

அத் தியாக புருஷனின் முதல் வருட நிறைவு விழா 15–7–55-ல் சிறப்பாக நடைபெற்றது. ரவி ஆர்ட்ஸ் நண்பர் அய்யாச்சாமி வரைந்த தியாகி முத்துவின் திருவுருவப்படத்தை அலங்கரிக்கப்பட்ட வண்டியில் வைத்து, வாழ்த்தொலிகளுடன் உப்பிலிப்பாளையத்தில், தொழிலாளர் தலைவர் டி. ஆறுமுக முதலியார் தலைமையில் ஊர்வலம் நடந்தது. தோழர் எல். அப்பு பல இடங்களில் செங்கொடிகள் ஏற்றுவித்தார்.

மில் தொழிலாளர் சங்கத் தலைவர் எம். பூபதி தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் ஆறுமுக முதலியார், எஸ். என். காளியண்ணன் முதலியோர் பேசிய பிறகு, கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாகாணக் கமிட்டி அங்கத்தினர் தோழர் ஏ. பாலசுப்பிரமண்யம், "தொழிலாளி வர்க்க ஒற்றுமையைக் கட்டுவோமென்றும், சோஷலிஸ சித்தாந்தங்களைப் பரப்புவோமென்றும், தியாகியின் பேரால் சபதமெடுக்கும்படிக் கூறினார்.

#### தியாகி முத்துவின் குடும்பத்துக்கு ரூ. 680

கோவை மில் தொழிலாளர் சங்கம் வசூலித்த தியாகிகள் நிதியிலிருந்து தியாகி முத்துவின் குடும்பத்துக்கு ரூ 350-ம், கோத்தாரி மில் தொழிலாளர்கள் தனியாக வசூலித்துத் தந்த ரூ. 330-ஐ முத்துவின் குழந்தைகளின் பேருக்கு, முத்துவின் மனைவியைக் கார்டியனாகக் குறிப்பிட்டு பேங்கியில் போடப்பட்டது.

#### நாடகத்தில் 5000 பேர்!

அன்றிரவு செங்கதிர் கலாமண்டல வாசகசாலையின் கலைக்குழுவினர், மாஸ்டர் எஸ். பாபு, பேபி சைனு ஆகியவர்களின் நாட்டியங்களுடன் "தியாகி" எனும் நாடகம், திரு. ரங்கசாமி நாயுடு தலைமையில் நடத்திக் காண்பித்தார்கள். நாடகத்துக்கு 5000 பேர் வந்திருந்து விழாவைச் சிறப்பித்தார்கள்.

# அந்நியர் பிடியில் இந்திய கம்பெனி

## அசோக் மோட்டார்ஸ் அசோக்-

## லேலண்ட் கம்பெனியான கதை

### சர்க்காருக்குப் பொறுப்பில்லையா?

தொழில்கள் இந்திய மயமாக்கப்படும். இந்தியாவிலேயே மோட்டார்கார்கள் உற்பத்தி செய்வோம். ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்கு விசேஷ சலுகை தரப்படும் என்றெல்லாம் இந்திய சர்க்கார் பிரசாரத் தம்பட்டமடித்து வருவதைப் பார்க்கிறோம்.

ஆனல் வாஸ்தவத்தில் நடப்பதென்ன? இந்திய மயமாவது ஒருபுறமிருக்க, இந்தியக் கம்பெனிகளை அந்நியத் திமிங்கலக் கம்பெனிகள் கபளிகரம் செய்கின்றன. தொழில் அபிவிருத்தி வெறும் ஏட்டுச் சுரைக்காய். சொல்வேறு செயல்வேறு என்ற நிலையில் சின்னு பின்னப்படும் ஐந்தாண்டுத்திட்ட ஆலோசனைகள். இதற்கெல்லாம் பிரத்தியட்ச உதாரணமாகத்தான் அசோக் மோட்டார் கம்பெனி அசோக் லேலண்ட் கம்பெனியான கதை இருக்கிறது.

அசோக் மோட்டார் தொழிற்சாலை 1949ல் எண்ணூரில் துவங்கப்பட்டது. ஸ்ரீ ரகுநந்தன் சரனை மானேஜிங் டைரக்டராகக் கொண்ட நூற்றுக்கு நூறு இந்திய நிர்வாகம். ஆஸ்டின் லேலண்டு கார்கள், டிரக் சேஸிகளை இணைத்து இந்தியாவில் விற்பனை செய்ய எழுந்த ஸ்தாபனம். இந்திய சர்க்காரால் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் பொறுக்கி எடுக்கப்பட்ட ஐந்து மோட்டார் உற்பத்தி ஸ்தாபனங்களில் இதுவுமொன்று. பேபி ஆஸ்டின் (சிறு) கார்கள் உற்பத்தியும், லேலண்ட் டிரக் சாஸிகள் உற்பத்தியும் படிப்படியாக இந்தியாவிலேயே உற்பத்தி செய்த பாகங்களைக் கொண்டு இணைத்து நிர்மாணம் செய்து விற்பனை செய்யும் உரிமை அளிக்கப்பட்டது.

1953ல் நிகழ்ந்த நாகபுரி விமான விபத்தில் ஸ்ரீ. ரகுநந்தன் சரன் காலமானர். அவருடன் அவர் வைத்திருந்த தஸ்தாவேஜிகளும் எரிந்து சாம்பலாகி விட்டதாகக் கூறப்படுகிறது!

#### திட்டம் நிறைவேறியதா?

ஆஸ்டின் கார் உற்பத்தித் திட்டம் நிறைவேறியதா? இதற்குரிய பாகங்கள் இங்கு செய்யப்பட்டதா? இல்லை! உற்பத்தி யந்திரங்களுக்காக அந்நியக் கம்பெனிகளின் தயவை எதிர்பார்த்தது ஒருபுறம். மறுபுறம் இத்தகைய யந்திரங்களை இறக்குமதி செய்ய இந்திய சர்க்கார் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் கும்பகர்ணனுடன் போட்டி போட்டது. மத்திய சர்க்காரில் தமது சொந்த செல்வாக்கால் சிலந்தி வலை விரித்து வரும் தனி நபர்கள் முட்டுக்கட்டைகள் போட்டனர்.

விளைவு என்ன? இறக்குமதியான பகுதிகளை இணைத்து விற்பது தவிர வேறு முன்னேற்றம் எதுவும் காணவில்லை. 1951ல் யந்திரங்களுக்கு ஆர்டர் கொடுக்கப் பட்டதாகக் கூறப்பட்டது. 1954 வரையில் அவை வரவில்லை. சிறு சிறு மெஷின்கள் வரவழைக்கப்பட்டிருந்தாலும் அவற்றை உபயோகிக்கவில்லை.

கம்பெனியில் வேலை செய்து வந்த தொழில் நுட்பம் தெரிந்த சிலரை பர்மிங்ஹாம் ஆஸ்டின் தொழிற்சாலைக்கு அனுப்பிப் பயிற்சி கொடுப்பதாகத் தம்பட்டமடிக்கப்பட்டது அதுவும் கைவிடப்பட்டது. கம்பெனியிலிருந்த நிபுணத்துவமிக்க தொழிலாளர் பலபாகங்களைத் தாமே செய்து காட்டினர்களாம். தரத்தில் உயர்ந்திருந்தும் ஊக்க மளிக்கவில்லை சர்க்கார்.

#### திரை மறைவில்

எனவே ஸ்ரீ சரன் இறந்தபிறகு ஆஸ்டின் கார் உற்பத்தி கைவிடப்பட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டப்படி ஆணிகளைத் தவிர வேறு எதையும் கம்பெனி செய்யவில்லை.

இதனிடையில் 1954-ல் மே தினப் பரிசாக 25 திறமை வாய்ந்த தொழிலாளர்கள் விலக்கப்பட்டனர். தொழிலாளர் நலவுரிமைகள் மறுக்கப்பட்டன.

இதனிடையில் திரைமறைவில் பல நாடகங்கள் நடைபெற்றன. அந்நியக் கம்பெனியின் தாண்டவம் நடந்தது. லேலண்ட் கம்பெனி என்ற பிரிட்டிஷ் கம்பெனி தன்னிடம் முழுப்பொறுப்பையும் ஒப்படைத்தால் கம்பெனியை முன்னேற்றுவதாகக் கூறியது. அதை எதிர்க்க அசோக் கம்பெனி நிர்வாகத்திற்குத் திராணியில்லை. இந்திய சர்க்காரின் பின்பலமும் கிடையாது. எனவே, சரணகதிப் படலம் துவங்கியது. 20-6-54-ல் நடைபெற்ற டைரக்டர் கூட்டம் பலாத்காரமாகப் புகுத்திய நிபந்தனைகளுக்குத் தலைவணங்கியது.

இதன்பிரகாரம் ஏற்பட்ட ஒப்பந்தப்படி:

1. தற்போதைய அசோக்மோட்டார் ஸ்தாபனம் இனி அசோக் லேலண்ட் மோட்டார்ஸ் (இந்தியா) லிமிடெட் என்ற பெயரில் அழைக்கப்படும்.
2. பங்குகளில் 100-க்கு 40-ஐ லேலண்ட் கம்பெனியார் வாங்கிக்கொள்வார்கள்.
3. நிர்வாகம் லேலண்ட் கம்பெனியின் பொறுப்பு.
4. மானேஜிங் டைரக்டரும், வேறு இரு டைரக்டர்களும் லேலண்ட் மோட்டார் சார்பில் தெரிந்தெடுக்கப்படுவார்கள்.
5. தொழில் நுட்ப வேலைக்காரர்கள் லேலண்ட் ஸ்தாபனத்தால் இந்தியாவுக்கு அனுப்பப்படுவார்கள். அவர்களுடைய ஊதியம் செலவு எல்லாம் இந்தியக் கம்பெனி பொறுப்பு.
6. முந்திய மானேஜிங் ஏஜென்சி ஸ்தாபனத்திற்கு ஏஜென்ஸி முடியாத பகுதிக்கு ஈடாகப் பணம் அளிக்கப்படும்.
7. விற்பனை கவனிப்பு அதிகாரி, இரு எஞ்சினீயர்கள் லேலண்டிலிருந்து வருவர். சம்பளம் இந்தியக் கம்பெனி பொறுப்பாகும்.

#### அந்நியர் பிடிப்பு

அந்நியர் பிடிப்பும் பிடிவாதமும் வென்றது. இந்தியக் கம்பெனி விதேசிகள் ஆதிக்கத்தில் வந்தது. இதுதான் ஐந்தாண்டுத் திட்ட சாதனையா? இதுதான் உள்நாட்டில் தொழிலை வளர்க்கும் லட்சணமா? இதர கம்பெனிகளில் பங்குகள் உள்ள இந்திய சர்க்கார் பெரும்புள்ளிகளும் இந்தக் காட்டிக்கொடுக்கும் வேலைக்குக் கையாளாக இருந்திருக்கிருர்களா?

லேலண்ட் கம்பெனிக்கு வருஷத்தில் இருபது லட்சம் பவுன் பெறுமான வியாபாரம் நடப்பதாகக் கூறப்படுகிறது. ஆனல், தொழிலாளர் ஊழியர் நிலை படுமோசம். புது டைரக்டர்களாக சர் ஹென்றிஸ்பாரியர், டொனல்ட் ஸ்டோக்ஸ், ஏ. இ. எல். காலின்ஸ் என்று ஆங்கிலேய தொழில் பிரமுகர்கள் அதிகாரபீடத்தில் ஏறியிருக்கிருர்கள். அசோக் என்ற பெயரை ஒட்ட வைப்பதற்கே ஸ்ரீமதி ரக்ஷாசரன் போராடியதாகக் கூறப்படுகிறது.

அந்நியக் கம்பெனியான லேலண்டு இங்கு மோட்டார்களை இறக்குமதிசெய்து கொள்ளை லாபமடிக்கிறது. இறக்குமதி விலை ரூ. 7500 உள்ள டீஸல் எஞ்சினை ரூ. 11,250க்கு தனிப்பட்டோருக்கு விற்கிறதாம். ரூ. 10,000க்கு சர்க்கார் டிரான்ஸ்போர்ட் அதிகாரிகளுக்கு விற்கிறதாம். கிங்பின் என்றும் ஆணியின் குறைந்தபட்ச பட்டியல்படி விலை ரூ. 100ஆம். இப்படியெல்லாம் அடிக்கும் லாபத்துடன் கூட்டுக் கம்பெனி லாபத்தில் 100க்கு 50 வேண்டும் என்று லேலண்ட் உரிமை பாராட்டுகிறதாம்? உண்மை எதுவோ!

#### பதில் கூறட்டும்

அந்நியக் கம்பெனி இந்தியக் கம்பெனி ஒன்றை கபளிகரம் செய்த வேதனைநிறைந்த சம்பவம் இது. இதை நடக்க அனுமதித்தது சர்க்கார் என்று குற்றஞ் சாட்ட முடியும். ஆரம்பத்தில் ஒப்புக்கொண்டபிரகாரம் அசோக் கம்பெனியை அபிவிருத்தி செய்யாததற்குப் பொறுப்பாளிகள் யார்? பெரிய யந்திரங்களை கொண்டுவந்து பகுதிகளை இங்கேயே செய்திருந்தால் இந்த நிலை ஏற்பட்டிருக்குமா? யந்திரங்கள் தர பிரிட்டன் மறுதளித்திருந்தால் கொடுக்கத் தயாராகவுள்ள மற்ற நாடுகளை—மக்கள் ஆட்சிகளை அணுகியிருக்கலாமல்லவா?

லேலண்ட் கம்பெனி இரண்டு கோடி ரூபாய் மூலதனம் போடுவதாகக் கூறப்படுகிறது. இந்திய மூலதனம் எத்தனை? அந்நிய மூலதனத்தித்தின் ஆதிக்கத்திற்குப் பச்சைக் கொடி காட்டப்படுகிறதா?

அந்நியக் கம்பெனிக்குக்கையாளாக நின்று (சுதேசி) அசோக் கம்பெனியை பயமுறுத்தி கெடுபிடிகள் செய்துதான் படுமோசமான நிபந்தனைகளை ஏற்கும்படி நிர்ப்பந்தம் செய்திருக்கின்றனர் சர்க்கார் பிரமுகர்கள் என்பது உண்மையா? சுதேசித் தொழிலைக் கழுத்தறுக்கும் இந்தக் கைங்கர்யத்தின் சூத்ரதாரி யார்? இந்திய சர்க்கார் பதில் கூறட்டும்!

—பாரத்வாஜ்.

# ஜெனிவா - ஒப்பந்தத்தைச் சீர்குலைக்கச் சதி

## சைகோன் அட்டூழியங்களின் பின்னல் நடப்பதென்ன?

மீண்டும் ஒருமுறை தென்கிழக்காசியாவில் சமாதானத்திற்குப் பேரபாயம் ஏற்பட்டிருக்கிறது. அமெரிக்காவின் பின்துணையுடன் தூண்டுதலுடன் தெற்கு வியட்னும் சர்க்கார் கும்பல், ஜெனிவா ஒப்பந்தத்தைச் சீர்குலைக்கப் பேயாட்டமாடுகிறது.

ஜெனிவா ஒப்பந்தத்தின் முதலாவது ஆண்டு விழாவான ஜூலை 20-ந் தேதி ஸைகோனில் நடந்த அட்டூழியங்கள், பாசிஸ்ட் வெறியாட்டங்கள் இந்தப் பேரபாயத்தை அப்பட்டமாக எடுத்துக்காட்டியுள்ளன.

ஜெனிவாவில் நான்கு வல்லரசு தலைவர்கள் 'உச்சாணி' கூட்டம் நடைபெறும் அதே கட்டத்தில் சைகோனில் நடந்ததென்ன? இந்தோசீனவில் போர் நிறுத்தம் கண்ட ஜெனிவா ஒப்பந்தத்தைச் சீர்குலைக்க தெற்கு வியட்னும் ஆட்சிபீடத்திலிருக்கும் தியமின் கும்பல் கலகம் விளைத்தது. காட்டு மிராண்டித்தனமாக நடந்து கொண்டது.

ஜூலை 20ந் தேதி ஜெனிவா ஒப்பந்தத்திற்கு எதிராகவும், சர்வதேச கண்ட்ரோல் கமிஷனை ஆட்சேபித்தும் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. தலைக்கு 200 வெள்ளி கூலிபெற்ற ரௌடிகள் ராணுவ டிரக்குகளில் கொண்டுவரப்பட்டனர். ராணுவ-போலீஸ் படையினர் சாதாரண உடையுடன் கலந்துகொண்டார்கள். இந்திய சர்க்கார்—போலிஷ் சர்க்காரைச் சேர்ந்த சர்வதேச கண்ட்ரோல் கமிஷன் உறுப்பினர்கள் தங்கியிருக்கும் ஹோட்டல் மெஜஸ்டிக், ஹோட்டல் கலீனி இரண்டும் தாக்கப்பட்டு தகர்க்கப்பட்டன. கமிஷனின் இந்திய அக்ராசனர் எம் ஜி. தேசாய் தாக்கப்பட்டார்.

#### நீசத்தனமான தாக்குதல்

பகிரங்கமான இந்த பாசிஸத் தாக்குதலை தியம் சர்க்கார் நேராக முன்னிருந்து நடத்தியிருக்கிறது. 19-ந் தேதி சர்க்கார் ராணுவ டிரக்குகளில் ஒலிபரப்பிகளைப் பொருத்தி இந்த ஆர்ப்பாட்டத்தில் சேரும்படி அறைகூவப்பட்டது.

ஜெனிவா ஒப்பந்த ஆண்டுவிழா தேசிய அவமானத்தின் சின்னம் என்று தியம் அறிக்கைவிட்டார். வெறி தூண்டப்பட்டது. வேண்டுமென்றே திட்டமிட்டுத் தாக்குதல் நடத்தியுள்ளதாக இந்திய சர்க்கார் ஜெனிவா ஒப்பந்தக் கூட்டத்தின் சக தலைவர்களான மாலடாவுக்கும் ஈடனுக்கும் தெரிவித்துள்ளது. நெறிகெட்ட இந்த நீசத்தனமான தாக்குதலை பிரிட்டிஷ் சர்க்காரும் கண்டித்திருக்கிறது. "தெற்கு வியட்னும் சர்க்காரே இதற்கு முற்றிலும் பொறுப்பாளி"; என்று டைம்ஸ் ஆப் இந்தியா குற்றஞ் சாட்டுகிறது. "ஜெனிவா ஒப்பந்தத்தைச் சீர்குலைக்கத் திட்டமிட்டுச் செய்த சதி" என்று ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்ட் கண்டிக்கிறது.

இதன் பின்னணி என்ன? ஜெனிவா ஒப்பந்தம் எத்தகைய சூழ்நிலையில் உருவாயிற்று என்பதைப் பார்ப்போம். வியட்னுமில் பிரெஞ்சு ஏகாதிபத்தியவாதிகளுக்குத் தோல்விமேல் தோல்வி. விடுதலைப் போர் உக்ரமாக நடக்கிறது. இந்தக் கட்டத்தில் அமெரிக்கா தலையிட முஸ்தீப்பாகிறது. தென் கொரியாவுக்குக் கொடுத்த தளவாடங்களை விட அதிகமான தளவாடங்களைக் குவித்து, அணுகுண்டு ஆயுதங்களைத் திரட்டித் தலையீடுக்குத் துடியாய்த் துடிக்கிறது. ஒரு உரசல், பின்னல் உலக யுத்தத் தீ மூளும். இதைத் தவிர்த்தது ஜெனிவா ஒப்பந்தம். போர் நிறுத்தம் நடந்தது.

#### ஆலோசனைக்கு அழைப்பு

ஜெனிவா ஒப்பந்தப்படி சர்வதேசக் கமிஷன் வேலை செய்து 1956-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் தெற்கு—வடக்கு வியட்னும்களில் பொதுத் தேர்தல் நடைபெற்று வியட்னும் ஐக்கியப் படுத்தப்பட வேண்டும். இதற்குப் பூர்வாங்கமாக இந்த ஆண்டிலேயே பரஸ்பரம் கலந்தாலோசிக்க வேண்டும். இந்த ஆலோசனைக் கூட்டத்திற்கு தெற்கு வியட்னும் பிரதிநிதிகளை நியமிக்குமாறு கோரி ஜூலை 19ந் தேதி வடக்கு வியட்னும் உதவிப் பிரதமர் பாம் வான் டாங் கடிதம் எழுதினர். ஆனல் நடந்ததென்ன?

ஜூலை 16.ந் தேதி தெற்கு வியட்னும் பிரதமர் தியம் கூட்டு ஆலோசனைக்கும், பொதுத் தேர்தலுக்கும் எதிராக ஆத்திரமூட்டும் வகையில் பேசினர். கம்யூனிஸ்ட் விரோதத்தை வாந்தி எடுத்தார். வியட்னுமில் பொதுத் தேர்தல் நடத்தக் கூடாதென்று அமெரிக்கா—டல்லஸ் பலமுறை வலியுறுத்தி வந்திருக்கிருர். வியட்னுமைத் துண்டாடி, தெற்கு வியட்னுமை அமெரிக்க காலனியாக்கி அதைத் தளமாகக் கொண்டு வடக்கு வியட்னும்மீது படையெடுத்து அடிமைப்படுத்த வேண்டும் என்பதே! அமெரிக்க—தியம் கூட்டுச் சதித்திட்டம். தெற்கு வியட்னும் வந்துள்ள அமெரிக்க ஸ்தானிகர் பிரட்ரிக் ரீன்ஹார்ட் இதற்குரிய அமெரிக்க திட்டங்களுடன் களத்தில் இறங்கியுள்ளார்.

தேர்தல்கள் நடைபெருமல் முட்டுக்கட்டையிட்டுத் தடுத்தும், தெற்கு வியட்னுமில் தென் கொரியாவிலுள்ளது போன்ற பொம்மையாட்சியை நிறுவியும் பின்னல் திரை மறைவில் சூத்ரதாரியாக இருந்து தமது ஆதிக்கத் திட்டங்களை நிறைவேற்றவும் அமெரிக்கா தில்லு முல்லுச் செய்கிறது. இதன் வழியே தெற்கு வியட்னும், லாஒஸ், கம்போடியா போன்ற நாடுகளை ஸியாட்டோ சிலந்தி வலைங்குள் இழுக்கலாமல்லவா?

#### அனுமதிக்கக் கூடாது

ஆனல் வியட்னும் மக்கள் இந்த சதித் திட்டங்களை அனுமதிக்கப் போவதில்லை. ஜெனிவா ஒப்பந்தத்தை எழுத்துக்கெழுத்து நிறைவேற்ற வேண்டுமென்பது அவர்கள் அபிலாஷை. பிரதமர் நேரு

(8-ம் பக்கம் பார்க்க)

# மக்கள் சீனவிலே

## பிளேக்-காலரா அடியோடு ஒழிக்கப்பட்ட விதம்

பிளேக் காலரா போன்ற கொடுந் தொத்துநோய்கள் போனேன் போனேன் என்று 1949 முதல் சீனவை விட்டு ஒழிந்துபோய்விட்டன. பள்ளிகளில் படிக்கும் சிறுவர்களிடையே போஷனைக் குறைவு என்பது மருந்துக்குமில்லை என்று இந்தியாவிலிருந்து விஜயம் செய்திருந்த வைத்திய தூதுகோஷ்டியினர் கண்ணூரக் கண்டு புகழ்மாலை சூட்டியுள்ளனர்.

மத்திய ஆராய்ச்சி கழகத் தலைவர் கர்னல் அஹூஜா தலைமையில் சென்ற இந்த கோஷ்டி ஐந்தாறு வருட காலங்களுக்குள் ஆஸ்பத்திரிகள் விஞ்ஞானக்கூடங்கள் ஆராய்ச்சி கழகங்கள் நவீன வைத்தியமுறைகளைப் பின்பற்றி நிபுணர்களை சிருஷ்டித்து வெகுவாக வளர்ந்து வருவதையும் ஏராளமான டாக்டர்கள் பயிற்சிபெற்றுப் பணியாற்றுவதையும் பாராட்டினர்கள்.

இந்த சாதனை ஏதோ மந்திரக்கோல் மூலம் ஏற்பட்ட மாயாஜாலமல்ல. உறுதியான பணியினுல் சர்க்காரும் மக்களும் சேர்ந்து சாதித்தவை என்று குறிப்பிட்டனர்.

# தேசியப் பொருளாதாரப்

# கம்யூனிஸ்ட் கட்சியின்

**உடனடியான தேசிய புனருத்தா... இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தி... அங்கீகரிக்கும்படி கீழ்வரும் பொதுவா... இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி முன் வை...**

இந்தியாவின் பொருளாதாரத்தைப் புனருத்தாரணம் செய்யத் துரிதமான தொழில் வளர்ச்சிக்கு அடித்தளத்தை நிறுவி, உண்மையான நிலச் சீர்திருத்தத்தை அமுல் நடத்த வேண்டும் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர். இப்பணியை நிறைவேற்றுவிடில் தேசியப் புனருத்தாரணமென்பது சாத்தியமில்லை.

## தொழில் வளர்ச்சியும் பொது அரங்கமும்

நமது பொருளாதாரத்தை புனருத்தாரணம் செய்ய கனரகத் தொழில்களான எஃகு, நிலக்கரி, பெரும் ரசாயனத் தொழில், யந்திரம் உண்டாக்கும் யந்திரம் போன்ற தொழில்களை துரிதமாக வளர்க்க சகல முயற்சியும் செய்தாக வேண்டும். இந்தக் கனரகத் தொழில்களை வளர்ப்பது தான் நமது தொழில் வளர்ச்சியின் பிரதான கடமையாக இருக்க வேண்டும்.

### பொது அரங்கில்

புதிதாக ஆரம்பிக்கப்படும் சகல கனரகத் தொழில்களும் பொது அரங்கில் (அதாவது சர்க்கார் கையில் இருக்கும் தொழிலாகத்)தான் இருக்க வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது. டாட்டா, இந்தியன் அயர்ன் ஸ்டீல் கம்பெனி போன்ற ஏகபோக முதலாளிகளுக்கு உதவி செய்வதாகச் சொல்லிக்கொண்டு ஏராளமாக பணத்தை அள்ளிக் கொடுப்பதை எதிர்க்கிறோம். அவர்களது சொந்த வரவினங்களைப் பற்றி கவலை கொள்ளாது, பொதுநலனை முன்னிட்டு தகுந்த நிபந்தனைகளை விதிக்காது, இவ்வித உதவி தருவதை எதிர்க்கிறோம்.

கோடிக்கணக்கான ரூபாய் பணம் அவர்களுக்குக் கொடுத்தது மட்டுமல்ல; சில சந்தர்ப்பங்களில் வட்டியே இல்லாமல் கொடுத்தது மட்டுமல்ல; எஃகு விலையை உயர்த்தி கொள்ளை லாபம் சம்பாதிக்கும்படி டாட்டா போன்ற முதலாளிகள் ஊக்கமளிக்கப்பட்டுள்ளார்கள். அபிவிருத்திக்காக மக்களை நிர்ப்பந்தப்படுத்தி பணம் வசூலித்து அதனால் கிடைக்கும் கொள்ளை லாபத்தை ஏகபோக முதலாளிகள் அடையும்படி செய்துள்ளார்கள்.

எனினும் புதிதாக ஒருதுறையில் தொழிற்சாலைகளை ஆரம்பிப்பதை விட அதே துறையில் இன்றுள்ள தொழிற்சாலைகளை அபிவிருத்தி செய்வது லாபகரமாக இருக்குமானால், அவைகளுக்கு சர்க்கார் உதவி தரலாம். இவ்வித தொழிலுக்கு உதவி தரும்பொழுது சர்க்கார் எந்த அளவிற்கு ஒரு தொழிலுக்கு உதவி செய்கிறதோ அந்த அளவு அந்த தொழிலின் நிர்வாகத்தில் சர்க்காரும் பங்குகொள்ள வேண்டுமென்றும் கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது.

இவ்விதம் பங்கு கொள்வதன் மூலம் சர்க்கார் தரும் உதவி சரியான விதத்தில் உபயோகப்படுத்தப்படும்படி கண்காணிக்க முடியும். அதிலிருந்து கிடைக்கும் லாபத்தை தேசிய பொருளாதார அபிவிருத்திக்கு உபயோகிக்கமுடியும். இன்றுள்ள நமது பொருளாதார நிலையில் பொது அரங்கிலேயே புதிய தொழில்களை ஆரம்பிப்பது அவசியமாகும். பொது அரங்கம் என்பது புதிய தொழில்களை ஆரம்பிப்பதுடன் நின்று விடக்கூடாது. நமது தொழிலில் கேந்திரமாகவும், ஆதிக்கம் வகிக்கும் நிலைமையிலுமுள்ள பிரிட்டிஷ் தொழிற்சாலைகளை தேசியமயமாக்குவது நமது பொருளாதாரத்தை மேலும் வளர்ப்பதற்கு அத்தியாவசியமாகிறது. பிரிட்டிஷ் தொழிற்சாலைகளை தேசிய மயமாக்காத வரையில் நமது பொது அரங்கம் நமது பொருளாதாரத்தில் வகிக்கவேண்டிய அந்தஸ்தை அடைய முடியாது. தொழில் வளர்ச்சியின் போக்கை நிர்ணயிக்கவும் முடியாது

பிரிட்டிஷ் தொழில்களை எடுத்துக் கொள்வதானது சர்க்கார் கையில் மூலதனம் சேகரமாகும் ஒரு பெரும் சாதனம் கிடைப்பதாகும். அதைத் தொழில் வளர்ச்சிக்கு உபயோகப்படுத்த முடியும். நம் தேசிய வளர்ச்சிக்கு, இன்று பிரிட்டிஷ் முதலாளிக்கு சொந்தமான தொழில்களில் சில ஜீவாதாரமானவை என்பதை நாம் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். இவ்விதத் தொழில்களும், தொழிற்சாலைகளும் பிரிட்டிஷ் முதலாளிகளின் கையிலிருப்பதால் அவைகளை தேசிய விரோதப் பாதையில் நடத்தப்படும் நிலைமை ஏற்படுகிறது. நமது தொழில் வளர்ச்சிக்கு இது குறுக்கே வருகின்றது.

### மாங்கனீஸ் உற்பத்தியில் ஏகபோக அந்தஸ்து

உலகத்தின் மாங்கனீஸ் உற்பத்தியில் இந்தியா சோவியத் யூனியனுக்கு அடுத்தாற்போல் இரண்டாவது அந்தஸ்து வகிக்கிறது. முதலாளித்துவ உலகின் மார்க்கெட்டில் இந்தியா கிட்டத்தட்ட ஏகபோக அந்தஸ்தை வகிக்கிறது. எஃகு உற்பத்திக்கு மாங்கனீஸ் உலோகம் மிகமிக அவசியம். என்றாலும் நம் நாட்டில் மாங்கனீஸ் இரும்புத் தொழில் ஒன்று கூட இல்லை.

இந்திய மாங்கனீஸ் சுரங்கங்கள் அனைத்தும்பிரிட்டிஷ் ஏகபோகமுதலாளிகளுக்கு சொந்தமாக இருப்பதால் நம் நாட்டில் உற்பத்தியாகும் மாங்கனீஸ் எல்லாம் ஏகாதிபத்திய நாடுகளில் எஃகு தொழிற்சாலைகளை வளர்க்க ஏற்றுமதி செய்யப்படுகிறது. பிரிட்டிஷ் முதலாளிகளுக்குச் சொந்தமான நம் நாட்டிலுள்ள மாங்கனீஸ் சுரங்கங்களை தேசியமயமாக்கினால் நமது அரசாங்கம் பெரிய மாங்கனீஸ் இரும்பு தொழிலை வளர்க்கும் சக்தியை பெறும் என்பது மட்டுமல்ல; நமக்கு லாபமான விதத்தில் நமது தொழில் வளர்ச்சிக்கு அத்யாவசியமான சாதனங்களை முதலாளித்துவ உலகத்திலிருந்து அடைய மாங்கனீஸ் உலோகத்தைப் பொறுத்தவரையில் நமக்குள்ள அநேகமாக ஏகபோக அந்தஸ்தை உபயோகித்துக்கொள்ள முடியும்.

### நிலக்கரி உற்பத்தி

இதுவரையில் தெரிந்துள்ள இந்தியாவின் நிலக்கரி சாதனங்கள் மிக அதிகமல்ல. நமது நாட்டின் உலோகங்களின் சாதனங்களும் குறைவாகவேயுள்ளன. உலோகங்களை உருக்க உதவும். நிலக்கரி உற்பத்தியில் பிரிட்டிஷ் நிலக்கரி கம்பெனிகள் அநேகமாக ஏகபோக அந்தஸ்தை வகிக்கின்றன. கீழ்ரக நிலக்கரியைக் கொண்டு செய்யக்கூடிய வேலைகளுக்கெல்லாம் மேற்கூறிய உயர்ந்த ரக நிலக்கரியை உபயோகிக்கின்றனர். இதன் விளைவாக உலோகங்களை உருக்கும் நமது நிலக்கரி சேமிப்பு துரிதமாக உபயோகப்படுத்தப்பட்டு வீணாகின்றது.

மேலும் நமது நிலக்கரி முதலாளிகள் நிலக்கரியை பாதுகாப்பதில் அக்கரை செலுத்துவதே இல்லை. சுரங்கத்தில் வேலைசெய்யும் தொழிலாளர்களின் நலன்களை அலட்சியம் செய்கின்றார்கள். அவர்களுடைய குறிக்கோளெல்லாம் லாபம் ஒன்றிலேதான். நிலக்கரி போர்டு தலைவரும், நிலக்கரி கமிஷனருமான ஆர். கே. ராமத்யானி இந்த உண்மையை பகிரங்கமாக ஒப்புக்கொண்டுள்ளார். அவர் எழுதியதாவது:—

"பல நிலக்கரி சுரங்கக் கம்பெனிகளின் பிரதான நோக்கம் கிடைக்கும் நிலக்கரி பூராவையும் தோண்டி எடுப்பதல்ல. எந்த பகுதிகள் மிகவும் லாபகரமாக உள்ளனவோ அவைகளில் மட்டும் வேலைசெய்யும் போக்குதான் உள்ளது. குறைந்த லாபம் தரும் பகுதிகள் புறக்கணிக்கப்படுகின்றன.

"சுரங்கங்களில் பாதுகாப்பிற்கான சட்டங்களும், விதிகளும் இருந்தபோதிலும் ஒழுங்கும் ஜாக்கிரதைத் தன்மையும் குறைவாகவுள்ள முறைகளேயே கையாளும் போக்கு உள்ளது."

### செம்பு உலோகம்

இந்தியாவின் செம்பு உலோக இருப்பு மிகமிக குறைவு; என்றாலும் இங்குள்ள ஒரேஒரு செம்புச் சுரங்கம் பிரிட்டிஷ் முதலாளிக்குச் சொந்தமானது. இதன் உற்பத்தி பூராவும் வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

### சணல்

நமது நாட்டு சணல் தொழிலை வளர்ப்பதில் அத் தொழிலில் ஆதிக்கம் செலுத்தும் பிரிட்டிஷ் முதலாளிகள் கொஞ்சங்கூட அக்கரை காட்டுவதில்லை. நமது மக்களின் தேவைகளை பூர்த்திசெய்யும் விதத்தில் தேவையான சரக்குகளை உற்பத்திசெய்வதுமில்லை. சீனாவுடனும், மற்ற சோஷியலிஸ நாடுகளுடனும் சணல் வியாபாரத்தை பெருக்குவதை அவர்கள் வெறுக்கிறார்கள்.

இவ்விதம் நமது ஏற்றுமதியைப் பரவலாக்குவது அமெரிக்க மார்க்கெட்டை அண்டி இருக்கும் நிலைமையைக் குறைப்பதற்கு அவசியம் என்பதுமட்டுமல்ல; நமது வெளிமார்க்கெட்டை விஸ்தரிப்பதற்கே அவசியமாகிறது. நமது உள்நாட்டு மார்க்கெட்டை வளர்த்து வெளிமார்க்கெட்டையும் விஸ்தரிக்கத் தவறியதால் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் உற்பத்திக் குறிக்கோளை நிறைவேற்ற முடியாமல்போய்விட்டது. இன்றைய தொழிற்சாலைகளின் சக்தியைப் பூரணமாக உபயோகித்திருந்தாலே இந்தக் குறிக்கோளை அடைந்திருக்கமுடியும். மாறாக திட்டமிட்டபடியில் உற்பத்தி குறைக்கப்பட்டுள்ளது.

### தோட்டத் தொழில்

ஏராளமான லாபந்தரும் சாதனமாக உள்ளது தோட்டத் தொழில். மனிதத் தன்மையற்ற முறையில் இந்திய தொழிலாளி வர்க்கம் சுரண்டப்படுவது இங்குதான். 1954ம் வருடத்தின் முதல் 11 மாதங்களில் பிரிட்டிஷ் தோட்ட முதலாளிகள் 4 கோடி 34 லட்ச ரூபாய் தங்கள் நாட்டிற்கு லாபமாய் அனுப்பியுள்ளனர்.

### தேசிய மயமாக்குக!

எனவே முதலில் மாங்கனீஸ் சுரங்கங்கள் தங்கச் சுரங்கங்கள், செம்புச் சுரங்கங்கள், சகல நிலக்கரி சுரங்கங்கள், பிரிட்டிஷ் முதலாளிகளுக்குச் சொந்தமான அல்லது அவர்களது நிர்வாகத்திலுள்ள சணல் மில், தோட்டங்கள், அந்நிய பாங்குகள், அந்நிய இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் ஆகியவற்றை உடனடியாக தேசியமயமாக்கவேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி ஆலோசனை கூறுகிறது. நமது கப்பற் கட்டும் தொழிலை துரிதமாக வளர்த்து இன்று நமது வெளிநாட்டு கப்பல் போக்குவரத்தில் உள்ள அந்நிய ஆதிக்கத்தை தகர்க்கவேண்டும். இதற்காக நமது தேசத்திற்கு சொந்தமான கப்பல்களை கணிசமாக அதிகரிக்கவேண்டும். அடிப்படையான யந்திர உற்பத்திசெய்யும் தொழில்களை வளர்க்கும் வரையிலும், இன்றுள்ள தொழில்களில் ரேஷனலைசேஷனை புகுத்தும் நோக்கத்துடன் புதிய யந்திரங்களை புகுத்துவதை நிறுத்த வேண்டும். உபயோகத்திற்கான பொருள்களின் தேவையை முடிந்தவரையில் இன்றைய தொழில்களை பூரணமாக உபயோகப் படுத்துவதின்மூலம் பூர்த்தி செய்யவேண்டும். சிறு தொழில்கள், குடிசைத் தொழில்களுக்கு ஆதரவு தந்து அவைகளின் மூலம் உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவேண்டும். சிறு தொழில்களும், குடிசைத் தொழில்களும் பூரணமாக உபயோகப் படுத்தபட வேண்டுமானால் ஏகபோக முதலாளிகளின் போட்டியைச் சமாளிக்க அவைகளுக்கு மான்யங்கள், காப்புவரிகளின் மூலம் பாதுகாப்பு கொடுப்பதுடன், அவைகளை விற்பனை செய்ய மார்கெட் உத்ரவாதமும் தருவது அவசியம்.

இவ்விதத் தொழில்களிலிருந்து உற்பத்தியாகும் சரக்குகளை சர்க்கார், சர்க்கார் சார்புள்ள ஸ்தாபனங்களுக்கு தேவையான ஸ்டோர்ஸ்களுக்காக பெரிய அளவில் வாங்கிக்கொள்ள வேண்டும். விற்பனை செய்ய மார்கெட் சந்தர்ப்பங்களை உண்டாக்குவதுடன் இவ்வித தொழில்களுக்குப் போதிய கடன் வசதிகள் செய்து தரவேண்டும். குறைந்த அளவில் மூலப் பொருள்களும் கிடைக்கும்படி செய்யவேண்டும்.

## அந்நிய வியாபாரம்

நமது தேசிய பொருளாதாரத்தின் மிக முக்யமான பகுதிகளில் அந்நிய வியாபாரமும் ஒன்று. நமது அந்நிய வியாபாரம் பிரிட்டிஷ் ஏகபோக முதலாளிகளின் கையில் இருப்பதால் அது இன்று பிரதானமாக ஏகாதிபத்ய மார்கெட்டில்தான் நடக்கிறது. அதிலும் குறிப்பாக பிரிட்டனிலும், அமெரிக்காவிலுந்தான் நடக்கிறது.

இதன் விளைவு என்ன? அசமத்துவமான வியாபார நிபந்தனைகள் இந்தியாவின்மேல் திணிக்கப்படுகின்றன. நமது செல்வம் கொள்ளையடிக்கப் படுகின்றது. நமது மூலப் பொருள்களின் விலைகள் குறைக்கப்படுகின்றன. அதே சமயத்தில் இறக்குமதி செய்யப்படும் சரக்குகளின் விலைகள் குறிப்பிடத் தகுந்த விதத்தில் குறையவில்லை. இக் காரணங்களினால் நம் நாட்டு விவசாயிகள் ஓட்டாண்டியாகிறார்கள். நமது பொருளாதாரம் பலஹீனமடைகின்றது.

சோஷியலிஸ மார்க்கெட்டுடன் இந்தியா தனது வியாபார முறையை பெரிய அளவில் வளர்த்தாலன்றி ஏகாதிபத்யவாதிகளைச் சார்ந்து நிற்பதனால் ஏற்படும் ஆபத்தை போக்கமுடியாது. நமது அந்நிய வியாபாரத்திலும் கப்பல் போக்குவரத்திலும் பிரிட்டிஷ் மூலதனம் ஆதிக்கம் வகிக்கும் வரையிலும் இந்திய ஏகபோக முதலாளிகள் பிரிட்டிஷ் முதலாளிகளுடனும், உலக முதலாளித்துவ மார்க்கெட்டுடனும் வைத்திருக்கும் பரம்பரையான தொடர்பு நீடிக்கும் வரையிலும் சோஷியலிஸ மார்க்கெட்டுடன் நமது வியாபாரத்தை வளர்ப்பதற்கு மிகப் பெரு எதிர்ப்பு தோன்றத்தான் செய்யும். இதை புரிந்துகொள்வதில் கஷ்டமிருக்க முடியாது.

இந்த நிலைமையைச் சமாளிக்கும் வழி எது? அரசாங்கமே முக்யமான சரக்குகளின் அந்நிய வியாபாரத்தை பொறுத்தவரையில் ஏகபோக விற்பனையாளராக முன்வந்து பரஸ்பர லாபம் என்ற அடிப்படையில் பல்வேறு தேசங்களுடன் வியாபாரம் செய்தால்தான் இந்த நிலைமையைச் சமாளிக்க முடியும். பாகிஸ்தானுடன் நெருங்கிய பொருளாதார ஏனைய தொடர்புகள் இருப்பதால், அதனுடன் செய்யும் வியாபாரத்தை மட்டும் அரசாங்கம் மேற்கொள்ளக் கூடாது.

### திட்டமிட்ட வளர்ச்சிக்கு உதவும்

அரசாங்கமே அந்நிய வியாபாரத்தில் ஏகபோக அந்தஸ்து வகிக்குமானால் திட்டமிட்ட பொருளாதாரத்தையுடைய சோஷலிஸ மார்க்கெட்டில் சம்பந்தப்பட்ட தேசங்களுடன் நீண்டகால தவணையில் வியாபார ஒப்பந்தங்கள் செய்துகொள்ள முடியும். இவ்வித ஒப்பந்தங்கள் குறிப்பிட்ட அளவு நமது சரக்குகளை விற்பதற்கும் அதற்குச் சமமான அளவு நமது தொழில் வளர்ச்சிக்குத் தேவையான யந்திரங்களையும், சரக்குகளையும் வாங்கிக்கொள்ள உதவி செய்யும். இவ்வித ஒப்பந்தங்கள் நமது அந்நிய வியாபாரம் ஸ்திரமாகவும், மேலும் மேலும் சுதந்திரமாகவும் வளரப் பேருதவி புரியும்.

நெருக்கடி மிகுந்த முதலாளித்துவ உலக மார்க்கெட்டின் பிடியிலிருந்து நமது அந்நிய வியாபாரம் இன்று பாதுகாக்கப்பட வேண்டும். பொதுவாக நமது பொருளாதார வளர்ச்சியின் தேவைகளுக்கும், குறிப்பாக நமது தொழில் வளர்ச்சியின் தேவைகளுக்கும் உகந்தாற்போல் நமது அந்நிய வியாபாரத்தைப் பரவலாக்கி வளர்க்கவேண்டும்.

மேலும், அந்நிய வியாபாரத்தில் அரசாங்கம் ஏகபோக அந்தஸ்து வகித்தால் அதனால் கிடைக்கும் லாபத்தைத் தேசத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு உபயோகப்படுத்தலாம். இன்று நமது அந்நிய வியாபாரத்தில் ஆதிக்கம் வகிக்கும் அந்நிய முதலாளிகளுக்குக் கிடைக்கும் லாபத்தின்பெரும் பகுதி அவர்கள் இந்நாட்டில்வைத்திருக்கும் கணக்கில்கூடப் பார்க்க முடியாது. இந்த முதலாளிகள் தங்கள் தேசங்களில் வைத்திருக்கும்ஆபீஸ்களின்மூலம் நேரடியாகவே அந்த லாபத்தைச் சுருட்டிக்கொண்டு போகிறார்கள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொள்வது அவசியம். தேயிலை, தோல்போன்ற நாம் பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்யும் சரக்குகள் அங்கிருந்து வேறு பல நாடுகளுக்கு மறுபடியும் ஏற்றுமதி செய்யப்படுகிறது. அந்நிய வியாபாரம் நமது அரசாங்கத்தின் கையில் இருந்தால் இப்படி பிரிட்டன் நமது நாட்டிலிருந்து இறக்குமதி செய்து மீண்டும் ஏற்றுமதி செய்யும் சரக்குகளை வாங்கும் தேசங்களுக்கு நாமே நேரிடையாக ஏற்றுமதி செய்து இன்று நடுவில் நின்றுகொண்டு கொள்ளையடிக்கும் பிரிட்டிஷ்காரர்களுக்கு அந்த லாபம் செல்லாமல் அதை நாமே அடைய முடியும்.

மேற்கூறிய காரணங்களுக்காக முக்கியமான சரக்குகளைப் பொறுத்தவரையில் நமது அந்நிய வியாபாரத்தை அரசாங்கமே மேற்கொள்ள வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கோருகிறது. பாகிஸ்தானுடன் (தனி முதலாளிகள்) மேற்கொள்ளும் உண்மையான வியாபாரத்திற்குமட்டும் விதிவிலக்களிக்கலாம். இவ்விதம் நாம் போடும் திட்டத்தில் அந்நிய வியாபாரத்தைப் பற்றிய இந்தக் கொள்கை முக்கிய அம்சமாக இருக்க வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி வற்புறுத்துகிறது.

## பாதுகாப்பு வரியும் பாதுகாப்பும்

பெரும் ஆபத்தாகவுள்ள அன்னியப் போட்டியிலிருந்து நமது தேசியத் தொழில்களைப் பாதுகாப்பதின் அவசியத்தை மேலும் வலியுறுத்த வேண்டிய அவசியமில்லை. சர்க்காரின் ஏற்றுமதி இறக்குமதிக்கொள்கை சர்க்கார் திட்டத்துடன் மிகச்சிறிய அளவுதான் சம்பந்தப்படுத்தப்பட்டுள்ளது. ஏகபோக முதலாளிகளுக்கு லாபந்தரும் விதத்தில்தான் இறக்குமதி லைசென்சுகள் தாராளமாகக் கொடுக்கப்படுகின்றன. இறக்குமதிச் சரக்குகளின் அளவுகளின் எல்லை வரையறுப்புகள் கொஞ்சம் கொஞ்சமாக நீக்கப்பட்டுவருகின்றன. வியாபார-தொழில் மந்திரியின் அறிவிப்பு களிலிருந்து பார்த்தால், நம... தேசியத் தொழி...களுக்குப் பா... காப்புத் தர பா...காப்பு வரிகளை விதிக்கும் கொ...கை கைவிட... படும் என்று ...தரிகிறது. பா... காப்பு வரி சர்க்...ருக்குத் தேவை... யான வரியை ...வசூலிக்கும் வ... வாயாகத்தான் ...ருதப்படுகிறது.

அமெரிக்காவு... பிரிட்டனு... ஏற்றுமதியை அதிகரிக்க மும்மு... மாக முன் வந்து...ள்ள இந்தக் க... டத்தில் இவ்வித...கொள்கை ... யாளப்படுகிறது ...என்பதை ஞா... கத்தில் வைத்து...கொள்ளவேண... டும். சுதேசிப் ...பொருள்களுக்... போட்டியாக ...றக்குமதியாகு... சரக்குகளைப் ...பாருத்தவ... யில் சர்க்கா... தாராளமான... கொள்கையைக் ...கையாளுவது... சிறு வியாபா...களும், பெரி... வியாபாரிகளும்...தொழில் அதிப... களும் எதிர்த்து...வருவது குறி... பிடத் தக்கது. ஏனெனில் அன்ன... யப் பொருள்களின் தாரா... இறக்குமதி நமது தொழி... களுக்கு ஆபத்தை விளைவிக்கு... விதத்தில் உள்ளன.

சர்க்காரின் பண தேவையை... மட்டுமல்ல, நமது தொழில்களு... கு பாதுகாப்பு கொடுக்கவேண்டி... யதின் அவசியத்தையும் முன்... னிட்டு சர்க்கா...ன் பாதுகாப்... வரிக்கொள்கை...இருக்கவேண்டும்... சில ரக இறக்கும...திச் சரக்குகளு... கு அளவையும் ...ர்ணயித்துக் கட்... டுப்படுத்தவேண்...ம். இவ்விதம்... நமது அன்னிய... செலாவணிச்... சாதனங்களை த...வறான விதத்தில்... உபயோகப்படுத்...வதைத் தடுக்க... வேண்டும்.

பணக்காரவர்...கங்களினால் உப... யோகிக்கப்படும் ...ஆடம்பரப்பொ... ருள்களை அதா...து மக்களுக்கு... அத்தியாவசியம...லாத ஆடம்பரப்... பொருள்களை, ...மது பொருளா... தார அபிவிருத்...க்கு அவசியமில்... லாத பொருள்க...ளை இறக்குமதி... செய்வதைப் பூ...ணமாகத் தடை... செய்ய முடியா...விட்டால் கூட... பெரிய அளவு கு...றைப்பது அவசி... யம். இவைகளை இறக்குமதி... செய்யவேண்டிய... அத்தியாவசி... யம் ஏற்பட்டா...ல்கூட மிகக்... குறைந்த அள...விலும், அதிக... இறக்குமதி வரி ...விதித்தும் இறக்கு... மதி செய்யவே...ண்டும். சுதேசித்... தொழில்களுக்கு... பாதுகாப்புக்... கொடுக்கும் நோ...க்கத்துடன் நம்... நாட்டிற்குள் இரு...துகொண்டு நம்... நாட்டுத் தொழில்...களுடன் போட்டி... போடும் லீவர் பிரதர்ஸ் போன்ற... அன்னியக் கம்பெனிகளின்... போட்டியைக் கட்டுப் படுத்தித்... தகர்க்கவேண்டும்.

## நிலப்பிரச்சினை பற்றி

நமது தேச வாழ்வில் விவசாயமும் நிலப்பிரச்னையும் முக்கிய பங்கு வகிக்கின்றன. இதற்கு கம்யூனிஸ்டு கட்...பிரதான முக்கியத்துவம் கொ...க்கிறது. விவசாயிகளின் பரம...தரித்திரம் விவசாய வளர்ச்சிக்...கு முட்டுக்கட்டையாக இருக்கிற...து என்பதுமட்டுமல்ல; உற்பத்தி...யாகும் குறைந்த பட்ச அளவு பொ...ருள்களைக்கூட மக்கள் வாங்க ...முடியாத அளவு உள்நாட்டு மார்க்...கெட் மிக மிகச் சுருங்கும் நிலை...மையை சிருஷ்டிக்கிறது.

விவசாயிகளின்... வறுமையும் சீரழிவும் பல்ல...யிரக்கணக்கான விவசாயிகள் வேலை தேடி நகரப் புறங்களில் வந்து குவியும் நிலைமையை உண்டாக்கி இருக்கின்றன. வேலையில்லாது திண்டாடுவோரின் பட்...டாளத்தைத்தான் அதிகரிக்கின்றன. சம்பள எல்லை

# ...ாரப் புனருத்தாரணத்திற்கு

## ...கட்சியின் ஆலோசனைகள்

**...ான தேசிய புனருத்தாரணத்தை முன்னிட்டு ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய பாகமாக ...டி கீழ்வரும் பொதுவான வரையறுப்புகளை ...னிஸ்ட் கட்சி முன் வைக்கிறது.**

களிலிருந்து பார்த்தால், நமது தேசீயத் தொழில்களுக்குப் பாது காப்புத் தர பாதுகாப்பு வரிகளை விதிக்கும் கொள்கை கைவிடப் படும் என்று தெரிகிறது. பாது காப்பு வரி சர்க்காருக்குத் தேவை யான வரியை வசூலிக்கும் வரு வாயாகத்தான் கருதப்படுகிறது.

அமெரிக்காவும் பிரிட்டனும் ஏற்றுமதியை அதிகரிக்க மும்முர மாக முன் வந்துள்ள இந்தக் கட் டத்தில் இவ்விதக் கொள்கை கை யாளப்படுகிறது என்பதை ஞாப கத்தில் வைத்துக்கொள்ளவேண் டும். சுதேசிப் பொருள்களுக்கு போட்டியாக இறக்குமதியாகும் சரக்குகளைப் பொருத்த வரை யில் சர்க்கார் தாராளமான கொள்கையைக் கையாளுவதை சிறு வியாபாரிகளும், பெரிய வியாபாரிகளும் தொழில் அதிபர் களும் எதிர்த்து வருவது குறிப் பிடத் தக்கது. ஏனெனில் அன்னி யப் பொருள்களின் தாராள இறக்குமதி நமது தொழில் களுக்கு ஆபத்தை விளைவிக்கும் விதத்தில் உள்ளன.

சர்க்காரின் பண தேவையை மட்டுமல்ல, நமது தொழில்களுக் கு பாதுகாப்பு கொடுக்கவேண்டி யதின் அவசியத்தையும் முன் னிட்டு சர்க்காரின் பாதுகாப்பு வரிக்கொள்கை இருக்கவேண்டும். சில ரக இறக்குமதிச் சரக்குகளுக் கு அளவையும் நிர்ணயித்துக் கட் டுப்படுத்தவேண்டும். இவ்விதம் நமது அன்னியச் செலாவணிச் சாதனங்களை தவறான விதத்தில் உபயோகப்படுத்துவதைத் தடுக்க வேண்டும்.

பணக்காரவர்க்கங்களிலுல் உப யோகிக்கப்படும் ஆடம்பரப்பொ ருள்களை அதாவது மக்களுக்கு அத்தியாவசியமல்லாத ஆடம்பரப் பொருள்களை, நமது பொருளா தார அபிவிருத்திக்கு அவசியமில் லாத பொருள்களை இறக்குமதி செய்வதைப் பூரணமாகத் தடை செய்ய முடியாவிட்டால் கூட பெரிய அளவு குறைப்பது அவசி யம். இவைகளை இறக்குமதி செய்யவேண்டிய அத்தியாவசி யம் ஏற்பட்டால் கூட மிகக் குறைந்த அளவிலும், அதிக இறக்குமதி வரி விதித்தும் இறக்கு மதி செய்யவேண்டும். சுதேசித் தொழில்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கும் நோக்கத்துடன் நம் நாட்டிற்குள் இருந்துகொண்டு நம் நாட்டுத் தொழில்களுடன் போட்டி போடும் லீவர் பிரதர்ஸ் போன்ற அன்னியக் கம்பெனிகளின் போட்டியைக் கட்டுப் படுத்தித் தகர்க்கவேண்டும்.

## நிலப்பிரச்சினை பற்றி

நமது தேச வாழ்வில் விவசாய மும் நிலப்பிரச்னையும் முக்கிய பங்கு வகிக்கின்றன. இதற்கு கம்யூனிஸ்டு கட்சி பிரதான முக்கி யத்துவம் கொடுக்கிறது. விவ சாயிகளின் பரம தரித்திரம் விவ சாய வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை யாக இருக்கிறது என்பதுமட்டு மல்ல; உற்பத்தியாகும் குறைந்த பட்ச அளவு பொருள்களைக்கூட மக்கள் வாங்க முடியாத அளவு உள்நாட்டு மார்க்கெட் மிக மிகச் சுருங்கும் நிலைமையை சிருஷ்டிக் கிறது.

விவசாயிகளின் வறுமையும் சீரழிவும் பல்லாயிரக்கணக்கான விவசாயிகள் வேலை தேடி நகரப் புறங்களில் வந்து குவியும் நிலை மையை உண்டாக்கி இருக்கின் றன. வேலையில்லாது திண்டாடு வோரின் பட்டாளத்தைத்தான் அதிகரிக்கின்றன. சம்பள எல்லை யை மிகக் குறைந்த அளவில் இருக்கும்படி செய்கின்றன. இவ்விதம் மக்களின் வாழ்க்கை தரத்தை உயர்த்துவதைக் கடின மாக்குகின்றன.

### நிலஉடமைக்கு எல்லை

கோடிக்கணக்கான நம்நாட்டு விவசாயிகள் அரைப்பட்டினியாக வும் தங்களது குழந்தைகளை படிக்கவைக்க வழிவகையில்லாம லும் இருந்தால் தேசத்தின் கலாச் சார வளர்ச்சி என்பது முடியாத தாகிறது. விவசாயிகளின் வாழ்க் கைத்தரத்தை உயர்த்தாமல், விவ சாயத்துறையில் ஒரு பெரும் மாற் றத்தை ஏற்படுத்தாமல், பொது வாக நமது பொருளாதாரம் வளர் வதும், குறிப்பாக நமது தேசம் தொழில் வளர்ச்சியில் முன்னேறு வதும் சாத்யமல்ல. இந்த நிலைமை ஜனநாயக நிலச்சீர்திருத்தத்தைத் தான் வற்புறுத்துகின்றது. விவ சாயத் தொழிலாளர்களுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் நில வினியோகத்தை அவசியப்படுத்து கின்றது. எனவே உடனடியாக நிலஉடமைக்கு எல்லை வகுக்க வேண்டுமென்று கட்சி கோருகின் றது. இது பிரதேசத்திற்கு பிர தேசம் மாறுபடலாம். ஒரே பிர தேசத்திற்குள்ளேயே நிலத்தின் தரம், சாகுபடி செய்யக்கூடிய பயிர் ஆகியவற்றின் அடிப்படை மாறுதல் இருக்கலாம். நில உட மைக்கு எல்லை வகுப்பதில் கையாளவேண்டிய பிரதானக் கொள்கை வினியோகம் செய் வதற்கென்று சர்க்கார் கையில் அதிகபட்ச நிலம் கிடைக்கவேண்டு மென்பதே.

அதேசமயத்தில் தங்களுடைய சொந்த நிலத்தில் தங்களுடைய வும் தங்களுடைய குடும்பத் தினருடையவும் உழைப்பைக் கொண்டு சாகுபடிசெய்யும் விவ சாயிகளின் நிலத்தையோ, தங்க ளுடைய உழைப்புடன் வேலைக் கமர்த்தப்படும் தொழிலாளர் களின் உழைப்பையும் கொண்டு சாகுபடிசெய்யும் விவசாயிகளின் நிலத்தையோ பறிமுதல் செய்யா மல் பார்த்துக்கொள்வது அவசி யம். தங்கள் உழைப்பையோ அல்லது தங்கள் குடும்பத்தினர் உழைப்பையோ கொண்டு சாகு படி செய்யாத நிலப்பிரபுக் களுக்கோ அல்லது முதலாளித் துவ சாகுபடியாளருக்கோ இந்த விதி செல்லாது.

இவ்விதம் நிலத்திற்கு எல்லை வகுக்கும்போது சமீபகாலத்தில் நிலப்பிரபுக்கள் தங்களது நிலத் தை தங்களுடைய குடும்பத்தினர் உறவினரின் பேரில் பங்குபோட்டு ஏமாற்ற முன்வந்துள்ள தந்திரோ பாயங்களைத் தோற்கடிப்பது அவ சியம். நிலத்திற்கு எல்லை வகுக் கப்போகும் நோக்கத்தை தோற் கடிப்பதற்காகச் செய்துள்ள சூழ்ச்சிகளை செல்லுபடியாகாமல் செய்வது மிக அவசியம்.

நிலப்பிரபுக்களின் நிலத்தில் சாகுபடி செய்யும் விவசாயி களுக்கு நிரந்தரச் சாகுபடி உரி மை அளிப்பதுடன் அவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றுவது தண்டிக்கப்படவேண்டிய ஒரு குற்றமாக பிரகடனப்படுத்தித் தடைசெய்யப்படவேண்டும். எங் கெல்லாம் விவசாயிகளைப் பெரு மளவிற்கு நிலத்திலிருந்து வெளி யேற்றியுள்ளனரோ அவர்களுக்கு மீண்டும் சாகுபடிசெய்ய நிலம் கிடைக்கும்படி செய்யவேண்டும்.

நில உடமைக்கு எல்லை வகுக் கிற அதே சமயத்தில் சர்க்காருக் கும் நிலப்பிரபுக்களுக்கும் சொந்த மான சாகுபடிக்கு லாயக்கான தரிசை விவசாயிகளுக்கு உடனடி யாகப் பங்கிடவேண்டும். நிலப் பிரபுக்களிடம் விடப்பட்ட தரிசு நிலத்தை எல்லாம் மீண்டும் எடுத்து விவசாயத் தொழிலாளர் களிடையேயும் ஏழை விவசாயிக ளிடையேயும் வினியோகம் செய் வது அவசியம்.

ஏழை விவசாயிகளுக்கும், விவ சாயத் தொழிலாளர்களுக்கும் நிலத்தை வினியோகம் செய்தா லும் அவர்களுக்கு போதிய பண வசதி இல்லையென்றால் நிலத்தை சாகுபடி செய்வது நடக்காத காரி யம். எனவே சர்க்கார் செலவில் சாகுபடி செய்யக்கூடிய தரிசு நிலங்களை படிப்படியாக சாகு படிக்குக் கொண்டுவரவேண்டும். இதை விவசாயத் தொழிலாளர் கள் ஏழை விவசாயிகளின் ஒத் துழைப்புடன் செய்யவேண்டும்.

குத்தகை கணிசமான அளவு குறைக்கப்பட வேண்டும்.

## கடன் வசதிகள்

லேவாதேவிக் கடன்காரர்களிட மிருந்து நமது விவசாயிகள் விடு விக்கப்பட்டாலன்றி நமது விவசா யம் ஒரு ஸ்திரமான அடிப்படியில் கட்டப்பட முடியாது. நமது விவ சாயிகளுக்கு படிப்படியாக உய ரும் ஸ்திரமான வாழ்க்கைத்தரத் தை உத்தரவாதஞ் செய்ய முடி யாது.

புதிதாக உண்டாக்கப்பட்ட அர சாங்கபாங்க் இவ்விதக் கிராமக் கடன் வசதி அளிப்பதை தன் னுடைய வேலைகளில் ஒன்றாகக் கொள்ளவேண்டுமென்று விதிக் கப்பட்டாலும், இதற்காக ஒதுக் கப்படும் நிதி இந்தப் பிரச்னையின் எல்லையைக்கூட தொடும் விதத் தில் இல்லை. கிராமக கடனுக்காக ரூ. 250 கோடி ஒதுக்க வேண்டும் என்று கோருகின்றோம். இந்திய அரசாங்க பாங்க இந்த விவசாயக் கடனை தனது கிளைகள் மூலம் நேரடியாக விவசாயிகளுக்கு வினியோகிக்க வேண்டுமென்றும் கோருகிறோம்.

விவசாயத்தின் தேவையை அடிப்படையாகக் கொண்டு இவ் விதக், கடன் நிலம் வைத்திருக்கும் விவசாயிகளாக இருந்தாலும் சரி, வாரம் குத்தகை விவசாயிகளாக இருந்தாலும் சரி சகல விவசாயிக ளுக்கும் தரப்படவேண்டும். கடன் கொடுப்பதற்கு ஜாமீனாக தாவர சொத்து இருக்கவேண்டு மென்று நிபந்தனை விதிக்கக் கூடாது.

கடன் வசதிகளை விஸ்தரித்தால் மட்டும் போதாது. இன்று விவ சாயிகளின் மேல் தாங்க முடியாத பளுவாகவுள்ள கடன் சுமையி லிருந்தும் விவசாயிகள் விடுவிக் கப்படவேண்டும். இன்றைய விவ சாயக் கடன் ரூ. 900 கோடி என்று ரிசர்வ் பாங்க் கணக்கிட் டிருக்கிறது.

இந்தக் கடன்சுமையைக் கணிச மான அளவு குறைக்க நடவடிக் கைகள் எடுக்கவேண்டும். இவ் விதம் குறைக்கப்பட்ட பின்னர் இருக்கும் மீதிக் கடனை சுலபமான நீண்டகாலத் தவணைகளில் திருப் பித்தர ஏற்பாடு செய்ய வேண்டும் இந்த நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டு கம்யூனிஸ்ட் கட்சி மக் கள் பிரதிநிதிகளைக் கொண்ட கடன் சமரஸ போர்டுகள் நியமிக் கப்படவேண்டுமென்று கோரு கின்றது.

இவ்வித நடவடிக்கை எடுப்ப தற்கு முன்பாக லேவாதேவிக் காரர்களுக்கும் நிலப் பிரபுக்களுக் கும் தரவேண்டிய கடன்களை ஒத்திவைக்க வேண்டுமென்றும் கம்யூனிஸ்ட் கட்சி கோருகின்றது.

## கூட்டுறவு ஸ்தாபனங்கள்

நமது கிராமப்புறப் பொருளா தாரத்தைப் புனருத்தாரணம் செய்வதில் கூட்டுறவு ஸ்தாப னங்கள் ஒரு முக்கிய பங்கு வகிக்கின்றன. விவசாயிகளுக்கும் கைத்தொழிலில் ஈடுபட்டிருப்போ ருக்கும் நியாயமான விலையை உத் தரவாதம் செய்வதற்கும் அவர் களுக்குத் தேவையான அத்தியா வசியப் பொருள்கள் நியாயமான விலையில் அவர்களுக்குக் கிடைப் பதற்கும், சுலபமான கடன் வசதி செய்துதர கூட்டுறவு ஸ்தா பனங்கள் உதவியாயிருக்கும். இந்த நோக்கத்துடன் பெரும் அள வில் தேசம் பூராவும் கூட்டுறவு ஸ்தாபனங்களை வளர்க்கவேண் டும்.

உண்மையான நிலச்சீர்திருத் தம் இல்லாததால் இன்றைய கூட் டுறவு ஸ்தாபனங்கள் நிலப்பிரபுக் களும், லேவாதேவிக்காரர்களும் வியாபாரிகளும் கொள்ளையடிக்க உதவும் இடங்களாக இருக்கின் றன. சொத்து ஜாமீன் தரமுடி யாத ஏழை விவசாயிகளுக்கு கூட்டுறவு கடன், நிதி ஸ்தாபனங் கள் கடன் கொடுப்பதே இல்லை. விளைவு இந்த ஸ்தாபனங்களில் ஆதிக்கம் செலுத்தி அவைகளை நிர்வகிக்கும் நிலப்பிரபுக்கள்தான் தங்களுக்கும் தங்கள் உறவினர் களுக்குமாக கடன் வாங்க முடி கிறது. இந்த முறையில் வாங்கிய கடன்களெல்லாம் விவசாயத்தை வளர்ப்பதற்காகச் செலவிடப்பட வில்லை. நிலப்பிரபுக்களும் கடன் காரர்களும் நடத்தும் லேவா தேவித் தொழிலை மேலும் பலப் படுத்த உதவுகின்றது. இன்றுள்ள உபயோகிப்போர் கூட்டுறவு சங் கங்கள், போன்ற ஸ்தாபனங்க ளும் நிலப்பிரபுக்கள், வியாபாரி களின் லாபத்திற்காக உபயோகப் படுத்தப்படுகின்றன.

நிலப்பிரபுக்கள் கூட்டுறவு சங் கங்களை நிர்வகிப்பதிலிருந்து நீக் கப்படவேண்டும் என்றும் அவை களை பிரதானமாக விவசாயிகள் நிர்வகிக்கும்படி செய்யவேண்டும் என்றும் கம்யூனிஸ்டுக் கட்சி கோருகின்றது. சகல மட்டங்களி லும் இன்றைய கூட்டுறவு ஸ்தாப னங்கள் ஜனநாயகப் படுத்தப்பட தேவையான திருத்தங்களும் செய் யப்படவேண்டும்.

## விவசாயத் தொழிலாளர்கள்

தேசம் பூராவிற்கும் விவசாயத் தொழிலாளர்களின் குறைந்த பட்ச சம்பளத்தை நிர்ணயிக்க வேண்டும். நிலப்பிரபுக்களுக்கும் லேவாதேவிக் காரர்களுக்கும் அவர்கள் கொடுக்கவேண்டிய கடன் ரத்துசெய்யப்படவேண்டும் மேலும் சுலபமான கடன் வசதி யும் இலவசக்குடியிருப்பு மனைக் கட்டும் விவசாயத் தொழிலாளர் களுக்குத் தரவேண்டும். தரிசு நிலம் அவர்களிடையே வினியோ கம் செய்யப்படவேண்டும்.

## நீர்ப்பாசன விஸ்தரிப்பு

பெரும் அணைக்கட்டுத் திட்டங் களின் மூலமாக மட்டுமல்ல, எண் ணற்ற சிறு அணைக்கட்டுத் திட் டங்களை நிறைவேற்றி நீர்ப்பாசன வசதியை அதிகரிக்கவேண்டும்.

இவ்விதத் திட்டங்களை நிறை வேற்ற முடியாத இடங்களில் பூமிக்கடியிலுள்ள தண்ணீரை மின்சாரப் பம்புகள், குழாய் கிணறுகள் மூலம் உபயோகப் படுத்தவேண்டும். விவசாயிகளில் பெரும்பகுதியினர் இவ்வித வசதி கள் செய்துகொள்ள முடிய வில்லை. காரணம் மின்சாரப் பம்பு செட் போன்ற சாதனங் களை ஏற்பாடு செய்ய அரசாங்கம் அதீதமான பணத்தை டிபாசிட் கட்டும்படி கோருவதுதான். மின் சார பம்பு செட்டுகளை நிறுவும் வேலையை சர்க்கார் செலவிலேயே செய்ய வேண்டுமென்று கோரு கிறோம். நிறுவிய பின் விவசாயி கள் உபயோகித்துக்கொள்ளும் மின்சாரத்திற்கு மாத்திரம்தான் பணம் வசூலிக்கவேண்டும். அது போன்றே விவசாயிகள் கொடுக் கும் சக்திக்குத் தகுந்தாற்போல் தண்ணீர் தீர்வையையும் குறைக்க வேண்டும்.

## சமுதாய அபிவிருத்தி தேசிய அபிவிருத்தி திட்டங்கள்

ரோடுகள், குடி தண்ணீர் வசதி, உரம் உண்டாக்கும் பள்ளங்களைத் தோண்டுதல், சமூக விளையாட்டு சாதனங்களை உண்டாக்குதல், கட னாக உர வசதி செய்து தருதல், விவசாயக் கருவிகள் விதைகள் தருதல் போன்ற வசதிகளை எந்த அளவு சமுதாய அபிவிருத் தித் திட்டங்களும் தேசிய அபி விருத்திச் சேவைத் திட்டங்களும் கிராமங்களுக்குச் செய்ய உதவு கின்றனவோ, அந்த அளவு இவை கள் பிரயோஜனகரமான சேவை செய்கின்றன.

என்றாலும், இன்றைய நிலையில் கிராமப்புறத்தை அபிவிருத்தி செய் வதற்கான பிரதான வேலை இது தான் என்று காங்கிரசும் பண் டித நேருவும் பிரசாரம் செய்வ தைக் கம்யூனிஸ்டுக் கட்சி நிரா கரிக்கிறது. இன்றைய உடனடித் தேவையான ஜனநாயக நிலச்சீர் திருத்தங்களின் அவசியத்தினின் றும் கவனத்தை வேண்டுமென்றே வேறு வழியில் திருப்பச் செய்யப்படும் பிரச்சாரம் இது. சமுதாய அபிவிருத்தித் திட்டங் களும் தேசிய விஸ்தரிப்பு சேவாத் திட்டங்களும் நிலச்சீர்திருத்தத் திற்கு மாற்று மருந்தல்ல. நிலச் சீர்திருத்தம் இல்லையென்றால் இந் தத் திட்டங்கள் மிகக் குறுகிய பலன்களைத்தான் அளிக்கும்.

“இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் பிரகாரம் கிராமப் புறங்களுக்குச் செய்யப்படும் அபி விருத்திகளின் காரணமாக வரு ஷாந்திர அதிக வருமானம் நப ருக்கு ரூபாய் நான்குதான். இது கிராம வாழ்க்கையில் ஒரு குறிப் பிடத் தகுந்த முன்னேற்றத்தை அளிப்பதாக இல்லை....

“கிராமப்புறங்களிலுள்ள வேலை யில்லாத் திண்டாட்டம், அரை குறை வேலையில்லா நிலமையை யும் போக்க கிராமப்புறத்திலுள்ள மனித சக்தியையும் ஏனைய சாத னங்களையும் பரிபூரணமாக உப யோகிக்கப்படுவதைப்பற்றி ஒன் றுமே சொல்லப்படவில்லை...”

என்று 1955 ஏப்ரல் 8ல் ஹிந்து பத்திரிகை சுட்டிக்காட்டியது இங்கு முற்றிலும் பொருத்தமாக உள்ளது.

இந்தத்திட்டங்கள் மூலமாக வினியோகிக்கப்படும் கடன் வசதி யைப் பொறுத்தவரையில் அது கிராமப் புறத்தில் உள்ள ஜனத் தொகையில் ஒரு சிறிய பகுதிக் குத்தான் பிரயோஜனப்படுகிறது. குறிப்பாக நிலப்பிரபுக்களுக்கும் பணக்கார விவசாயிகளுக்கும் தான் பயன்படுகிறது. அதிகார பூர்வமான ரிப்போர்டுகள்கூட “கிராம ஜனத்தொகையில் முப் பது சத விகிதத்தினர்தான் இந்தத் திட்டங்களின் பிரகாரம் கடன் பெறும் தகுதியுள்ளவர்கள் என்று ஒப்புக்கொள்ளுகின்றன.

இந்தத் திட்டங்களில் அதிகார வர்க்கப் போக்குகள் பணத்தை வீண் விரயமாக்குபவையாயுள் ளன. தலைக்கனமான நிர்வாகத் தை உருவாக்கி திட்டங்களிலல் மக்களுக்குக் கிடைக்கும் பிரயோ ஜனத்தைவிட, இந்தத் திட்டத்தை நிர்வகிக்கும் நிர்வாக யந்திரம் பெரும் அளவு பணத்தை சாப் பிட்டு விடுகிறது இவைகளின் நிர்வகச் செலவில் கணிசமான அளவு குறைக்கவேண்டு மென்று கம்யூனிஸ்டுக் கட்சி கோருகிறது இவைகளின் மூலம் செலவழிக் கப்படும் பணம் பெரும் பகுதி மக்களுக்கு பிரயோஜனகரமாகச் செலவழிக்கப்பட வேண்டு மென்று கம்யூனிஸ்டுக் கட்சி கோருகிறது.

[இதன் பின் பகுதி அடுத்த இதழில் முடியும்.]

# பட்டுத் தொழில் வளர

## நெசவாளர் சங்க ஆலோசனைகள்

கூட்டுறவு சொசைடிகளுக்கு வெளியிலுள்ள நெசவாளர் களுக் குதவிசெய்ய ஸ்ரீ கோவிந்த நாயர், இந்திய அரசாங்க தொழில் இலாகா உதவிச் செயலாளரும், மற்றும் டிப்டி டெக்ஸ்டையில் கமிஷனர் ஸ்ரீ சபாநாயகம், அகில இந்திய கைத்தறி போர்டு உதவி டைரக்டர் ஸ்ரீ குழந்தைவேலும், காஞ்சிபுரம் கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்கத்திற்கும், காஞ்சீபுரம் காமாட்சி அம்மாள் பட்டு கூட்டுறவு சொசைடிக்கும் 24–7–55-ம் தேதி விஜயம் செய்த னர். சொசைடிக்கு விஜயம் செய் திருந்தபோது சொசைடியின் தலை வரும், காஞ்சி நகரசபை தலைவரு மான திரு. எஸ். எல்லப்ப முதலி யார் மற்ற டைரக்டர்களும் கலந்து கொண்டனர்.

தோழர் கே. எஸ். பார்த்த சாரதி, கைத்தறி நெசவுத் தொழி லாளர் சங்கத் தலைவர், பட்டுத் தொழில் வளர புதுரக தயாரிப்பு நிலையம் அமைத்துத்தர வேண்டும் என்றும், கூட்டுறவு சொசைடிக்கு வெளியேயுள்ள கைநெசவாளர் களுக்கு செஸ் நிதி உபயோகப் பட வேண்டுமென்றும், விஞ்ஞான ரீதியான சாயத் தொழிற்சாலை யை அமைத்துத் தரவேண்டுமென் றும், மாஸ்டர் வீவர்களால் உற் பத்தி செய்யப்படும் துணிகளை விற்பனை செய்வதற்காக உதவி செய்ய, வாங்கி விற்கும் டிப்போக் கள் அமைக்கவேண்டுமென்றும், மெட்ராஸ் ஆண்ட் கர்ச்சீப் (Madras hand Kerchief) மற்ற ஏற்றுமதி துணிகளையும் விற்பனை செய்வதற்கான பொறுப்பை அகில இந்திய கைத்தறி ஜவுளி விற்பனை சொசைடி மூலம் நடத்த வேண்டுமென்றும், அதற்கான நடைமுறை திட்டங்களுடன் யதாஸ்துகளை ஸ்ரீ கோவிந்த நாயர் இந்திய அரசாங்க தொழில் இலாகா உதவி செயலாளரிடம் சமர்ப்பித்தார்கள்.

சில முக்கிய பிரச்சனைகளான, கைத்தறி நெசவாளர்களுக்கு கடன் உதவி அளிக்கும் கிரெடிட் சொசைடி அமைத்து, அட்வான்ஸ் கொடுப்பதைப் பற்றி, ஏற்றுக் கொண்டதுடன் பேட்ரன் மேகிங் பேக்டரி, டையிங் பேக்டரி அமைத் துத் தர ஏற்பாடு செய்வதாயும், கோவாப்ரேடிவ் சென்ட்ரல் பாங்கியில் 5½% வட்டி வாங்கு வதை குறைத்து வாங்கும்படி செய்யப்படும் என்றும், மேற்படி காமாட்சி அம்மன் சொசைடி மூலமாகவே விற்பனை டிப்போக் களை அமைக்க ஏற்பாடு செய்வ தாகவும் வாக்குறுதி அளித்தார்.

சொசைடி டைரக்டரும், நகர சபை உறுப்பினருமான தோழர் A. K. ஆள்வார், வந்தனோபசா ரம் கூறினர். அதன் பிறகு கைத் தறி வட்டாரத்திற்கும் சென்று தறி களை பார்வையிட்டனர்.

**தொழிற்சங்கச் செய்தி**

ஆகஸ்டு 1-ம் தேதி வரவேண் டிய தொழிற்சங்கச் செய்திப் பத்திரிகை, ஆகஸ்டு 15-ல் வெளி வரும்.

நிர்வாகி.

# தோழர் கே. பூசாரி படுகொலை

## தோழர் சாம்பசிவம் மரணப் படுக்கையில்

### கோவையில் ரௌடிகள் பேயாட்டம்

கோவை மில் தொழிலாளர் சங்க ஊழியரும், கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினரும் விஜயலெட்சுமி மில் தொழிலாளியுமான செல்வபுரம் தோழர் கே. பூசாரியை 20-7-55 இரவு 9 மணிக்கு ஐ. என். டி. யு. சி. யைச் சேர்ந்தவர்கள் என்று கூறிக்கொள்ளும் குண்டர் கோஷ்டியினர், திடீரென வல்லயம், கத்தி, அரிவாள் போன்ற ஆயுதங்களால் தாக்கி கொலை செய்துவிட்டார்கள். மற்றொரு தோழர் சதாசிவம் பலமான வெட்டுக்காயங்களுடன் ஆஸ்பத்திரியில் அபாயகரமான நிலையில் இருக்கிறார்.

கோவை ஜில்லாவில் வளர்ந்து வரும் தொழிற் சங்க இயக்கத்தைப் பலவீனப்படுத்தவும், தொழிலாளர் ஒற்றுமையைப் பிளவுபடுத்தவும் ஐ. என். டி. யு சி. தலைமை இத்தகைய தாக்குதல்களில் நம்பிக்கை வைத்து தொடர்ந்து முயற்சித்து வருகிறது.

சில வாரங்களுக்கு முன் விஜயலெக்ஷிமி மில் கேட்டிற்கு முன்னால் பஞ்சாலைத் தொழிலாளர் சங்க (எச். எம். எஸ்) ஊழியர்கள் பகல் 11 மணிக்கு பொதுக் கூட்டம் நடத்திக் கொண்டிருக்கும் போது, அவர்களை ஐ. என். டி. யு. சி. குண்டர்கள் தாக்கி, மண்டையை உடைத்தும், கைகால்களை வெட்டியும் படுகாயப் படுத்தினார்கள்.

பிளவுவேலை, பொய்ப் பிரச்சாரம், துரோகத்தனம் ஆகியவற்றால், தொழிலாளர் ஒற்றுமையை உடைக்க முடியாதுபோகவே, இம்மாதிரியான கொலைகாரத் தாக்குதல்கள்மூலம் ஐ.என்.டி.யு.சி.யை வளர்க்கத் திட்டமிடுகிறார்கள்.

#### வேலை நிறுத்தம்

தோழர் பூசாரி கொலை செய்யப்பட்டார் என்ற செய்தி காட்டுத் தீ போல் பரவிற்று. காளீஸ்வரா மில் தொழிலாளர் 10 நிமிஷம் வேலையை நிறுத்தி மறைந்த தோழருக்கு வணக்கம் செலுத்தி சபதமேற்றார்கள். எல்லா ஏரியாக்களிலும் தொழிற் சங்கங்களும் வாசகசாலைகளும் கொடியைத் தாழ்த்தி மரியாதை செலுத்தின.

மறுநாள் மில் தொழிலாளர் சங்கத்தின்முன் தியாகி பூசாரியின் சவம் பார்வைக்கு வைக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான ஆண் பெண் தொழிலாளர்கள் திரண்டு வந்து கண்ணீர் விட்டு வணக்கம் செலுத்தி, ஐ.என்.டி.யு.சி, குண்டர்களைச் சபித்தனர்.

#### 7000 பேர் ஊர்வலம்

மாலை 4 மணிக்கு தியாகி பூசாரியின் சவ ஊர்வலம் மில் தொழிலாளர் சங்கத்திலிருந்து 4 மைல் தூரமுள்ள செல்வபுரத்துக்குப் புறப்பட்டது. கோவை, பீளமேடு, பாப்பநாயக்கன்பாளையம், சிங்காநல்லூர் தொழிலாளர் உட்பட 7000 பேர் திரண்ட மாபெரும் மவுன ஊர்வலம் பின் தொடர்ந்தது. தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சியின் மாகாணக் கமிட்டி அங்கத்தினர்கள் தோழர்கள் கே. டி. கே. தங்கமணி, பி. கே. ராமசாமி, என். கே. கிருஷ்ணன், மில் தொழிலாளர் சங்கத் தலைவர் பூபதி மற்றுமுள்ள தொழிற்சங்கத் தலைவர்கள் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டது. வழி நெடுக இருமருங்கிலும் கூடி நின்ற ஆயிரக்கணக்கான மக்கள் தியாகியின் நாமம் வாழ்க என்று கூறி வணக்கம் செலுத்தினார்கள்.

செல்வபுரத்தில், தியாகியின் சவ அடக்கத்தின்போது, தோழர்கள் தங்கமணியும் பூபதியும் தியாகியின் சேவைகளை விளக்கி, தொழிலாளர் ஒற்றுமையை வலியுறுத்தியும், ரௌடிகளைச் சர்க்கார் அனுமதித்துக்கொண்டிருப்பதைக் கண்டித்தும் பேசினார்கள். தங்கள் அருமை ஊழியனுக்கு இறுதி மரியாதை செலுத்தவந்த அத்தனை பேர் முகத்திலும் கோபாவேசமும் துக்கமும் குடிகொண்டிருந்தன.

## மலேயா விடுதலைப் போரை ஒடுக்க ஸியாட்டோ ராணுவம்

ஸியாட்டோ ஒப்பந்த நாடுகளின் தரை-கடல்-விமானப் படைகளின் இரகசிய இலாகா தலைவர்கள் சிங்கப்பூரில் கூடினர்- அவர்களது ராணுவத் திட்டங்களை செயல்படுத்த வழிகளைத் தேர்ந்தனர்.

இந்தத் திட்டங்கள் அமெரிக்காவால் சிருஷ்டிக்கப்பட்டு ஸியாட்டோ ராணுவ ஆலோசகர்களால் ஊர்ஜிதம் செய்யப்பட்டவை.

மலேயா மக்கள் விடுதலைப் போராட்டத்தை ஒடுக்குவதற்கு எந்த வழிகளில் ஸியாட்டோ ராணுவம் உதவமுடியும் என்பது இக்கூட்டத்தில் சர்ச்சை செய்யப்பட்டதாம்.

தென் கிழக்காசியாவில் யுத்தக் கொள்ளியாகத் தலைவிரித்தாடும் ஸியாட்டோ விடுதலை இயக்கங்களின் பரம வைரியல்லவா!

ஸியாட்டோவின் ரிசர்வ் படையாக மலேயாவில் ஒரு காமன்வெல்த் பட்டாளம் நிறுவப்படுமாம்.

## ராஜேந்திரா மில் அருகில் கைகலப்பு

சேலம் ராஜேந்திரா மில் கேண்டீனில் கால்பட்டு விட்டதென்றும், "பறையன்" உதைப்பதைப் பார்த்துக்கொண்டிருப்பதாஎன்று ஐ. என். டி. சி. யினர், சாதாரண விஷயத்தைப் பெரிதுபடுத்தி ஏ. ஐ. டி. யு. சி. தொழிலாளர்களை 23-7-55-ல் தாக்கினார்கள். ஐ. என். டி. யு. சி. யினரின் அக்ரமத்துக்கு தக்கபதில் கொடுத்து அனுப்பினார்கள் தொழிலாளர்கள்.

சிறு விஷயங்களைப் பெரிது படுத்தி, வர்க்க ஒற்றுமையைப் பிளவுபடுத்தும் ஐ. என். டி. யு. சி. யினரின் போக்கை தொழிலாளர்கள் வன்மையாகக் கண்டிக்கிறார்கள். —ந-கி.

## பீடித் தொழிலாளர் வெற்றி

வாணியம்பாடி 350 பீடித் தொழிலாளர்களின் 27 நாள் போராட்டம், நகர முக்கியஸ்தர்களின் தலையீட்டின் பேரில் லேபர் ஆபீஸர் முன்னிலையில் 18-7-55ல் சமரசம் ஏற்பட்டது.

பழைய முறையில் வேலை கொடுக்க முதலாளி ஒப்புக்கொண்டார்.

போராட்டத்துக்கு ஆதரவளித்தும் நிதி உதவியும் வந்த சகோதர தொழிலாளர்களுக்கும் சங்கங்களுக்கு நன்றி தெரிவித்து அறிக்கை விட்டிருக்கிறார் ஜில்லா சங்க காரியதரிசி தோழர் வே. கண்ணன்.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

குறிப்பிட்டதுபோல ஜெனிவா ஒப்பந்தத்தில் ஏதாவது ஒரு அம்சத்தை பகுதியை மீறினாலும் கூடப் பேராபத்தான நிலை ஏற்படும். சோதனை மிகுந்த இந்த கட்டத்தில் பெரும் வாதனையாகித் தீரும்.

தேசபக்தி மிக்க சக்திகள் அனைத்தும் வடக்கு வியட்னாம் சர்க்கார் பின் உறுதியாக நிற்கின்றன. உலகமுற்றுமுள்ள சமாதானப் பிரேமிகளும், ஜனநாயகவாதிகளும் ஜெனிவா ஒப்பந்தம் சீர்குலைக்கப்படுவதை அனுமதிக்க முடியாது. அனுமதிக்கக் கூடாது. ஜெனிவா ஒப்பந்தம் குலைவுற்றால் உலக சமாதானம் அலைபட்டுக் குலைவுறும். உலக அபிப்பிராயம் உறுதியுடன் நின்று இந்த விளைவு ஏற்படாது காக்கவேண்டும். சமாதானத்தை நிலைபெறச் செய்ய வேண்டும். இந்த விஷயத்தில் இந்திய சர்க்காருக்கும் இந்திய மக்களுக்கும் மகத்தான பொறுப்புண்டு.

சைகோன் சம்பவங்களைப் பற்றிப் பகிரங்க விசாரணை நடத்தி சர்வதேச அரசியல் அந்தஸ்துக்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று உலகம் ஒரு குரலில் கோரிக்கை முழங்க வேண்டும்.

## சபாஷ் காவேரி நகர்!

திருச்சி ஜில்லா, புதுக்கோட்டை காவேரிநகர் மில் தொழிலாளர்கள் ஜனசக்தி தினசரி நிதிக்கு இவ்வாரம் ரூ. 501 அளித்திருக்கிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அவர்களுக்கு எங்கள் நன்றியும், வாழ்த்துக்களும் உரித்தாகுக!

எம். ஆர். வி.

## ஏஜெண்டுகளுக்கு

வழக்கமான பிரதிகளுக்கு மேல் கூட்டவோ, குறைக்கவோ வேண்டுபவர்கள் பிரதி வாரமும் செவ்வாய்க் கிழமைக்குள் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

மாதா மாதம் பில் தொகைகளை 10ம் தேதிக்குள் அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

நிர்வாகி, "ஜனசக்தி"

## 15-வது அகில இந்திய காதி, கைத்தறி, சுதேசி & கைத்தொழில் பொருட்காட்சி, சேலம்

### ★ 1955 ★

(சேலம் நகரசபையால் நடத்தப்படுவது)

### இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள்

கலை அரங்கில் தினசரி மாலை 6-30 மணிக்கு

| 1955-ஆகஸ்டுமீ தேதி. | கிழமை | விபரம். | நிகழ்ச்சி |
|---|---|---|---|
| 7 | ஞாயிறு | குமாரிகள் B. ராஜலக்ஷ்மி, B.A., & B. மீனாக்ஷி | பாட்டு |
| 8 | திங்கள் | குமாரி கஸ்தூரி & கமலகுமாரி | நடனம் |
| 9 | செவ்வாய் | காரைக்குடி M.K லட்சுமி | பாட்டு |
| 10 | புதன் | சாயி-சுப்புலட்சுமி (மலைக்கள்ளன் புகழ்) (பின்னணி திருமதி P.A பெரியநாயகி) | நடனம் |
| 11 | வியாழன் | கந்தர்வகான ரத்ன திரு. M.K. தியாகராஜ பாகவதர் & S.D. சுப்புலட்சுமி பார்ட்டியார் (ஹார்மோனியம் திரு. G. ராமநாதன்) | நவீன சாரங்கதரா (நாடகம்) |
| 12 | வெள்ளி | திருமதி. கமலா லக்ஷ்மணன் (குமாரி கமலா) | நடனம் |
| 13 | சனி | குமாரி அபயம் சகோதரிகள் | நடனம் |
| 14 | ஞாயிறு | நகைச்சுவை அரசு, கலைவாணர் திரு. N.S. கிருஷ்ணன், T.A. மதுரம் பார்ட்டியார் | தளபதி (நாடகம்) |
| 15 | திங்கள் | திருமதி. K.B. சுந்தராம்பாள் | பாட்டு |
| 16 | செவ்வாய் | திரு M.G. ராமச்சந்திரன் & பார்ட்டியார் | இன்பக் கனவு (நாடகம்) |
| 17 | புதன் | ஷை | பகைவனின் காதலி (நாடகம்) |
| 18 | வியாழன் | ஷை | ஆசை நினைவு (நாடகம்) |
| 19 | வெள்ளி | கொச்சின் சகோதரிகள் | நடனம் |
| 20 | சனி | சிவாஜி நாடக மன்றம் (சிவாஜி கணேசன், S.V. சஹஸ்ரநாமம், மைனாவதி, A. ரத்னமாலா) | தோழன் (நாடகம்) |
| 21 | ஞாயிறு | ஷை | நாடோடி (நாடகம்) |
| 22 | திங்கள் | ஷை | விதி (நாடகம்) |
| 23 | செவ்வாய் | சாவாஸ் ஸ்டேஜ் சர்வீஸ் (சிவாஜி கணேசன், S.V சகஸ்ரநாமம், A. ரத்னமாலா | வானவில் (நாடகம்) |
| 24 | புதன் | ஷை | ஷை |
| 25 | வியாழன் | குமாரி சுசீலா (பொன்வயல் புகழ்) (நடன ஆசிரியர் திரு. P.S. கோபாலகிருஷ்ணன்) | நடனம் |
| 26 | வெள்ளி | குமாரி ராஜேஸ்வரி | நடனம் |
| 27 | சனி | குமாரி R. தங்கமணி | நடனம் |
| 28 | ஞாயிறு | குமாரி நீலா (அல்பேலா புகழ்) | நடனம் |
| 29 | திங்கள் | முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன T. K. S. சகோதரர்கள் | எது வாழ்வு? (நாடகம்) |
| 30 | செவ்வாய் | ஷை | ராஜராஜ சோழன் (நாடகம்) |
| 31 | புதன் | ஷை | ஷை |

சேலம்,
19—7—55.

பொருட்காட்சிக் கமிட்டியார்

குறிப்பு:—விபரம் அன்றாடம் வெளிவரும் நோட்டீசில் காண்க. நிகழ்ச்சிகளுக்கு முதலிரண்டு வகுப்புகளுக்கும் பொருட்காட்சி கமிட்டி ஆபீசில் ரிசர்வேஷன் செய்யப்படும்.

# நிதிமந்திரி சுப்பிரமணியத்துக்கு

## பத்திரிகையாளர் சுடச்சுட பதில்

ஜூலை 17, 18-ல் சென்னை அகில இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் மகாநாடு நடந்தது.

இம்மகாநாட்டை துவக்கி வைத்த செய்தி இலாக்கா மந்திரி திரு. சுப்ரமண்யம் பத்திரிகையாளரின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றிக் கவலை கொள்ளாது சில புத்திமதிகள் கூற முன்வந்தார்.

பத்திரிகையாளர்கள் மந்திரி சபையின் முடிவுகள், நடவடிக்கைகள் பற்றி சர்க்கார் மனமுவந்து தரும் செய்திகளைத் தான் வாங்கிக்கொண்டு போக வேண்டுமே தவிர, தாங்களே முயன்று சம்பந்தப்பட்ட மந்திரிகளுக்குத் தெரியாமலேயே செய்திகள் சேகரிக்கக் கூடாது. அவ்விதம் செய்வது பணம் சம்பாதிப்பதற்காகச் செய்யும் திருட்டுத் தொழிலாகத்தான் கருதப்படும் என்று ஆவேசம்கொண்டு பத்திரிகையாளரின் மீது படை எடுத்தார் மந்திரி.

ஒரு புறத்தில் பத்திரிகை சுதந்திரம் தாராளமாகத் தந்துள்ளோம் எனப் பறைசாற்றிவிட்டு மறுபுறத்தில் சர்க்கார் தரும் செய்திகளைமட்டுந்தான் போடவேண்டுமென்று கோரினால் அதன் அர்த்தமென்ன? காங்கிரஸ் சர்க்கார் விரும்பும் செய்திகளை மட்டுமே பிரசுரிக்க வேண்டுமென்பது தானே! பிறகு பத்திரிகை சுதந்திர மளித்துள்ளோம் என்று ஏன் கூறவேண்டும்? அந்த உரிமையையே ரத்து செய்து விட்டால் மந்திரியின் விருப்பம் போலவே செய்திகள் வெளியாகும்.

இன்று நடக்கும் ஆட்சி ஒரு கட்சியின் சர்க்கார். அந்தக்கட்சியின் போக்கை ஒப்புக்கொள்ளாத பல்லாயிரக் கணக்கான மக்களுக்கு இவ்விதம் சர்க்கார் செய்வதையும், செய்யப்போவதையும் எவ்விதம் மக்களுக்கு சாதக பாதகமாக இருக்கும் என்பதைத் தெரிந்துகொள்ள செய்திகளை சேகரித்துக் கொடுப்பது ஒரு ஜனநாயக அமைப்பிலேயுள்ள பத்திரிகையாளர்களின் கடமை இத்த கடமை வழி பணியாற்ற பத்திரிகையாளர் முயன்ருல் மந்திரி சுப்ரமண்யம், அவர்களுக்கு திருட்டுப் பட்டம் கட்ட முன்வந்துள்ளார்.

மந்திரி சுப்ரமண்யத்தின் விருப்பம்போல் பத்திரிகையாளர் நடக்கத் தயாராக இல்லை. அதே மகாநாட்டில் மந்திரியின் பெயரைக் குறிப்பிடாவிட்டாலும் அவரது போக்கை வன்மையாகக் கண்டனம் செய்யக்கூடிய தீர்மானமும் நிறைவேறியது. பத்திரிகையாளர் மக்களின் நலனை முன்னிட்டு சகல செய்திகளையும் சேகரித்துக் கொடுக்க சர்க்கார் குறுக்கே வரக் கூடாது எனவும் கோரப்பட்டது.

### சர்க்காருக்கும் முதலாளிகளுக்கும் எச்சரிக்கை!

பத்திரிகையாளருக்கும் தொழில் தகராறுச் சட்டத்தின்கீழ் குறிப்பிடப்படும் தொழிலாளர்கள் போன்று அந்தச் சட்டத்தில் கண்டுள்ளதுபோல் உரிமைகளை பெறலாம் என்றும்,பார்லிமெண்ட் சட்டமியற்றி இருப்பதை வரவேற்றும் மகாநாடு தீர்மானம் நிறைவேற்றியது.

நிருபர்கள், ஆசிரியர்கள் போன்ற பத்திரிகையாளரைக் பல பத்திரிகை முதலாளிகள் கசக்கிப் பிழிந்து மனிதத் தன்மையுடன் நடத்தாமல் இருப்பதைக் கண்டனம் செய்தும், பத்திரிகைக் கமிஷன் தந்துள்ள சிபார்சுகளை இந்திய சர்க்கார் மேலும் தாமதிக்காமல் அமுல் நடத்தவேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இந்தத் தீர்மானத்துடன் நின்றுவிடவில்லை அவர்கள் ஆகஸ்டு மாதத்தில் பத்திரிகையாளர் இந்தியாவெங்கும் கோரிக்கைதினம் கொண்டாடுவதெனவும் முடிவு எடுத்தனர். தலைவர் முடிவுரையில் கான்பூர் தொழிலாளர் போராட்டத்திற்கு அனுதாபம் தெரிவித்து உற்சாகமுடன் பேசினர்.

இந்த மகாநாட்டையும் மகாநாட்டின் முடிவுகளையும் கண்ணுற்ற யாரும் காங்கிரஸ் ஆட்சியின்கீழ் புதிய புதிய பகுதி நடுத்தர வர்க்க மக்கள் நல்வாழ்விற்காகப் போராட முன் வருவதை காண்பார்கள். காந்திக் குல்லாய்களைப் போட்டுக்கொண்டு ஊரை ஏமாற்ற நினைக்கும் சில பத்திரிகை முதலாளிகளுக்கு இந்த மகாநாடு ஒரு நல்ல எச்சரிக்கை. பத்திரிகைக் கமிஷன் சிபார்களை அமல் நடத்தாது, பத்திரிகையாளர்களை செய்தித் திருடர்கள்' என்று ஏசிப் பேசியும் முதலாளிகளுக்கு அனுசரணையாகவும் இருக்கும் சர்க்காருக்கும் இம்மகாநாட்டின் முடிவுகள் சிகப்பு விளக்குப் போன்றதொரு எச்சரிக்கை.

விசேஷ நிருபர்

# ரஷ்யாவில் நேரு கண்டவை

திட்டக் கமிஷனுக்குத் தலைமை வகித்து 14-7-55ல் நேரு பேசுகையில்:

### கட்டிடங்கள் கட்டுகிறார்கள்

"சோவியத் யூனியனில் உள்ள உழைப்பாளர்களில் இன்று 100க்கு 10 பேர் கட்டிட வேலைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். சோவியத் மக்கள் மூன்று தலைமுறைகளாக கட்டுப்பாடான வேலைகளில் பயிற்சியளிக்கப்பட்டிருக்கிறார்கள்.

### குழந்தைகள்

13-7-55ல் ஸ்ரீ பந்த் நடத்திய ஓர் விருந்துபசாரக் கூட்டத்தில் நேரு பேசுகையில்:

ரஷ்யாவில் தொழிலும் விவசாயமும் மிக உயர்ந்த அளவில் இயந்திர மயமாக்கப் பட்டிருக்கிறது.

ரஷ்யாவில் குழந்தைகளுக்கு விசேஷ வசதிகள் உள்ளன. மிகச் சிறந்த முறையில் ரஷ்யக் குழந்தைகளைப் பராமரிக்கிறார்கள். தேசமெங்கும் விடுமுறை விடுதிகள் உள்ளன. ஓய்வு மாளிகைகளில் சென்ற வருடம் 50 லக்ஷம் சிறுவர் சிறுமியர் ஒரு மாத விடுமுறையைக் கழித்தனர்.

### இரவு ஓய்வும் சம்பளமும்

பெரிய தொழிற்சாலைகளுக்கு அருகில் ஓய்வு விடுதிகள் இருக்கின்றன. களைப்புற்ற தொழிலாளர்கள், அவற்றில் ஓய்வெடுத்துக் கொள்ளலாம். அங்கு அவர்களுடைய வீட்டில் இருக்கும் சவுகரியங்களைவிட நல்ல சவுகரியங்கள் இருக்கின்றன. அப்படி யிருப்பதால்தான் மறுநாள் காலையில் வேலை செய்வதற்குத் தகுதியுள்ளவர்களா யிருக்கிறார்கள். தொழிலாளர்கள் மிகமிக உற்சாகமாக வேலை செய்கிறார்கள். ஆண்களும் பெண்களும் வேலை செய்கிறார்கள். மாதம் 500 ரூபிள் முதல் 5,000 ரூபிள் வரை சம்பாதிக்கிறார்கள்.

# ரஷ்ய உதவிபற்றி நேரு

ரஷ்ய உதவிபற்றி 19-7-55ல் நேரு புதுடில்லியில் பேசுகையில்:

"குறிப்பிட்ட திட்டங்களுக்காக, சில இயந்திரங்களையும், இயந்திர நுணுக்க உதவியையும், இயந்திர நிபுணர்களையும் பெறுவது சம்பந்தமாக ரஷ்ய சர்க்காருடன் விவாதித்தோம். எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் தொழில் வளர்ச்சிக்கு உதவிபுரிய சோவியத் சர்க்கார் தயாரா யிருப்பதாக என்னிடம் சொன்னார்கள். சோவியத் சர்க்கார் தங்கள நாட்டுக்கு பெரிய திட்டங்களைத் தீட்டி யிருக்கிறார்கள். அப் பெரும் சுமையை அவர்கள் சுமக்கவேண்டி யிருக்கிறது. மேலும் அவர்கள் சீன சர்க்காருக்கு உதவிக்கொண்டிருக்கிறார்கள். என்றாலும் தங்கள் நல்லெண்ணத்தைக் காட்டும் முறையிலும், அவர்களால் முடிந்த அளவிலும், ஏதேனும் குறிப்பிட்ட தொழில் அபிவிருத்திக்கு உதவுவதாகத் தெரிவித்தார்கள்!" என்றார் நேரு.

# கான்பூருக்கு தமிழ்நாட்டின் உதவி

## தூத்துக்குடியில் வேலைப்பளு பூதம் கொளுத்தப்பட்டது

ஒற்றுமை பலத்துக்கும் உறுதியான நீண்ட போராட்டத்துக்கும் ஈடிணையற்ற மகத்தான போராட்டத்தை நடத்தி, இந்தியத் தொழிலாளி வர்க்கத்துக்கு வழி காட்டியாக விளங்கும் சகோதர கான்பூர் தொழிலாளர்களுக்கு தமிழ்நாட்டுத் தொழிலாளர்கள் வாழ்த்துக் கூறுகிறார்கள்; சர்க்காரின் அடக்குமுறைகளைக் கண்டிக்கிறார்கள். பிரதமர் நேரு இதில் உடனே தலையிட்டு சமரசம் செய்து வைக்க வேண்டுமென்று தீர்மானங்கள் நிறைவேற்றினார்கள். கான்பூர் போராட்டத்துக்கு நிதியும் அனுப்பினார்கள்.

### மதுரை

கொட்டும் மழையையும் பொருட்படுத்தாமல், நூற்றுக் கணக்கான மதுரை நகர் தொழிலாளர்கள் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடத்தி ஆதரவு தெரிவித்திருக்கிறார்கள்.

### தூத்துக்குடி

தூத்துக்குடியிலும் ஆர்பாட்ட ஊர்வலமும், பொதுக் கூட்டமும் 20 சங்கங்களின் சார்பாக நடத்தியிருக்கிறார்கள்.

ஹார்வி வேலைப்பளுவை எதிர்த்து, சுமார் 10 அடி உயரமுள்ள ஒரு வேலைப்பளுபூதம், 1000 பேர்கள் கொண்ட ஊர்வலத்தின் முன்னே இழுத்துச் செல்லப்பட்டது. ஊர்வலத்துக்கு தோழர் டி. கே. சாமிதாஸ் தலைமைவகித்தார். புதுக்கிராம மைதானத்தில் தோழர் பி. ஐசக் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் அப்பூதத்தைச் சுட்டு எரித்தார்கள். தோழர்கள் முருகானந்தம் எஸ். எஸ். மாணிக்கம், சுடலைமுத்து முதலிய முனிஸிபல் கவுன்னிலர்கள் கான்பூர் போராட்டத்தை ஆதரித்தும், ஹார்வி வேலைப்பளுவை கண்டித்தும்பேசினார்கள்.

இரவில் 2000 பேர் முன்னிலையில் 'ஒன்பது ரூபாய்' என்ற நாடகமும் (தோழர் முருகானந்தம் எழுதியது) நடத்தப்பட்டது,

### மேட்டூர்

மேட்டூர் மில் தொழிலாளர்கள் ரூ. 36-4-0-ம், கெமிகல், டிரம் பிளாண்ட் தொழிலாளர்கள் ரூ. 10-8-0 ம் ஆக ரூ. 46-12-0 வசூலித்து 13—7—55-ந் தேதியன்று அனுப்பியதோடு, மேலும் வசூலித்து வருவதாக தோழர் ஏ. பழனிச்சாமி தெரிவிக்கிறார்.

### சென்னை

மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கத்திலிருந்து ஜூலை வரை ரூ. 136-4-0-ம், மறுதினம் ரூ. 28-ம் அனுப்பியிருக்கிறார்கள். டாக் லேபர் போர்டு ரிசர்வ்பூல் தொழிலாளர்கள் ஆர். பாண்டியனும், ஆர். செல்லையாவும் ஒருநாள் கூலி தலா ரூ. 3-6-0 வீதம் உதவியிருக்கிறார்கள் என்று தோழர் பொறைக்கலம் எழுதுகிறார்.

தோழர்கள் பட்டாபி, குப்பன், நாராயணசாமி, சையத் மொஹிதீன், நூர்டீன், நடராஜன், காசிராஜன், ஆகியோர் தலா 8 அணவும், முத்தையா, லோகநாதன் முதலியோர் தலா 4 அணவும், சங்கரன், ஆரியப்பன் ஆகியோர் தலா 1 ரூபாயும் ஆக ரூ. 6 தோழர் என். எஸ். ருக்மணி மூலம் அனுப்பியுள்ளனர்.

### மதுரை

மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் ஏற்கனவே ரூ. 152-2--0ம் அனுப்பியதுடன், 19-7-55-ல் ரூ. 15 அனுப்பியுள்ளதென்று தோழர் பி. டி. நாராயணன் எழுதுகிறார்.

### விருதுநகர்

வீரப்போர் புரிந்து இறுதியில் வெற்றிக்கொடி நாட்டியே தீருவோம் என்று வீரநடைபோட்டு முன்னேறிய சகோதர தொழிலாளர்களான கான்பூர் தொழிலாளர்களுக்கு தங்களது அன்பையும் ஆதரவையும் தெரிவித்துக்கொள்வதுடன் போராட்ட நிதியாக ரூ. 10-ம் பி. கே. ஜனார்த்தனன் மூலம் அனுப்பி வைத்திருக்கிறார்கள் விருதுநகர் டெக்ஸ்டைல் மில் தொழிலாளர்கள்.

### காவேரி நகர்

காவேரி நகரிலுள்ள புதுக்கோட்டை மில் தொழிலாளர் சங்கம் ரூ. 50-ம் ஜனசக்தி உதவி ஏஜண்டு தோழர். டி. குருசாமி ரூ. 1-ம் அனுப்பினார்கள்.

### மணப்பாறை

மணப்பாறை தியாகேசர் ஆலைத்தொழிலாளரிடம் ரூ. 3-8-0 வசூலித்து அனுப்பியிருப்பதாக தோழர். சி. கந்தசாமி தெரிவிக்கிறார்.

## நந்திதுருக தங்கச் சுரங்கத்தில் ஸ்ட்ரைக்

கோலார் நந்திதுருக தங்கச் சுரங்கத்தில் ஏர் ஆய்ஸ்டிங் டிரைவர்கள் உற்பத்தி போனஸ் கோரி 11-7-55 முதல் வேலைநிறுத்தம் செய்தார்கள். சங்கத்துக்குத் தலைவராக விளங்கும் ஐ. என். டி. யு. சி. திம்மையா இந்தப்போராட்டத்துக்குத் தலைமைதாங்கவில்லை. இதுமட்டுமல்ல. தங்கச் சுரங்கங்களை தேசிய மயமாக்க வேண்டுமென்று சர்க்கார் விடுத்துள்ள அறிக்கையை இந்த திம்மய்யா இதுநாள்வரை வரவேற்கவில்லையென்பதும் குறிப்பிடத் தக்கது.

ஆசிரியர்-
ஜனசக்தி
சென்னை.14

# சர்க்கார் கடனுதவியும் விவசாயிகளும்

பழனித்தாலூகாவில், விவசாயிகளுக்கு மாடுகள் வாங்கவும், கிணறுகளை வெட்டவும், ஆயில் இன்ஜின்கள் வாங்கவும், சர்க்கார் 55, 56ம் வருஷத்திற்கு ஆரம்பத்தில் ரூ. 84,000 வரை சாங்ஷன் செய்தது. இந்த ரூபாய்களை வினியோகிக்க ஒரு ஸ்பெஷல் தாசில்தாரையும், ஒட்டன்சத்திரம் கள்ளிமந்தயம் பிர்க்கா, ஆகிய இரண்டிற்கும் ஒரு ஸ்பெஷல் ரெவினியூ இன்ஸ்பெக்டரையும், பழனிக்கு ஒருவரையும், கோரிக்கடவு, தொப்பம்பட்டி பிர்க்காவிற்கு ஒருவரும் ரெவினியூ இன்ஸ்பெக்டராக நியமிக்கப்பட்டனர்.

விவசாயிகள் கடன் கேட்டு மனுப்போட்டபின் 4, 5 முறையாவது கிராமங்களிலிருந்து பழனிக்கு வந்து செலவழித்துக்கொண்டு மேற்கண்ட ரெவினியூ இன்ஸ்பெக்டர்களைப் பார்க்கவேண்டும் ரெவினியூ இன்ஸ்பெக்டரைப் பார்த்து மனுவை விசாரணை செய்து முடிக்கவேண்டுமென்று கேட்டால், ரூ. 400 வாங்குவதற்கு ரூ. 15லிருந்து ரூ. 20வரை கொடுத்தால்தான் முடியுமென்று கூறிவிடுகிறார். அடுத்தபடியாக லோன் சாங்ஷன் செய்ய தாசில்தாருக்கு ரூ. 20லிருந்து ரூ. 30 வரை கொடுக்கவேண்டும். கிராம அதிகாரிகளை கிராமத்திலிருந்து பழனிக்குக் கூட்டி வருவதற்காக செலவு செய்யவேண்டும். ஆக ரூ. 400 கடன் வாங்கும் விவசாயி ரூ. 70 வரை செலவழித்தால்தான் வாங்கமுடியும். இல்லை என்றால் கடன் வாங்க இயலாது. கள்ளிமந்தயம், ஒட்டன்சத்திரம் பிர்க்கா லோன் ரெவினியூ இன்ஸ்பெக்டரும், தாசில்தாரும், பணம்கொடுக்காதவர்களுக்குக் கடன் இல்லை, என்னவேண்டுமென்றாலும் செய்யுங்கள் என்று விவசாயிகளிடம் கூறுகிறார்கள். ஜில்லா கலெக்டரால் சாங்ஷன் செய்யப்படும் ஆயில் இன்ஜின் லோன் மனுவை விசாரணை செய்ய தாசில்தார் ரூ. 100லிருந்து 200 வரை கேட்கிறார். இதன் காரணமாக சர்க்கார் கடன் வாங்கும் விவசாயிகள் மிகுந்த கஷ்ட, நஷ்டமடைந்து வருகிறார்கள். சில விவசாயிகள் மேலதிகாரிகளுக்கும் புகார் செய்தார்கள். எனவே சர்க்கார் தாமதமின்றி கவனித்து, லோன் கொடுப்பதில் ஊழல் செய்யும் அதிகாரிகள்மீது தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும். காலதாமதமின்றியும், லஞ்சமின்றியும் விவசாயிகளுக்குக் கடன் கிடைக்கச் செய்யவேண்டும்.

பழனி,
5-7-55 } வி.ர. கருப்புசாமி

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

ஷம் முழங்கினர். கம்பன் தமிழனின் பண்பாடு, அறிவுத்திறன் அத்தனையும் ஜீரணித்திருக்கிறான் என்றும், தமிழகத்துக்கு ராமாயணம் ஒரு பெரிய'சம்பத்து என்று தக்க பல ஆதாரங்களுடன் ஜீவா எடுத்துக் காட்டினார்.

பிறகு மறுபடியும் ஜீவா புதுமைப் பித்தனின் சிருஷ்டிகளைப் பற்றி பேசினார். 'புதுமைப் பித்தனை ஒரு மதயானைக்கு ஒப்பிட்டுச் சொன்னார், புதுமைப்பித்தன் தனது எதிரிகளைக் கண்டு அஞ்சாது ஆணித்தரமான சிருஷ்டிகளை சிருஷ்டித்ததைப் பாராட்டினார். அன்னியநாட்டு இலக்கிய மேதைகளுடன் அவர்களது சிருஷ்டிகளிலிருந்து மேற்கோள் காட்டி, புதுமைப்பித்தனது சிருஷ்டிகளைப் பற்றி இலக்கிய கர்த்தாக்கள் மெய்சிலிர்க்கும் வண்ணம் ஜீவா எடுத்துக் காட்டினார். கடைசியாக ஜீவா இன்றையத் தமிழ் எழுத்தாளர்களைப்பற்றி பேசினார். தங்களது எழுத்துக்களை. கூலிக்குப் பணயம் வைக்கும், பல எழுத்தாளர்களை ஜீவா வன்மையாகக் கண்டித்தார். மேலும் கூறும்போது, ரகுநாதனின் 'பஞ்சும் பசியும்!, சேற்றில் மலர்ந்த செந்தாமரை' போன்ற நூல்கள் செக் மொழியில் மொழிபெயர்க்கப்படுவதையும் கூறினர். ரகுநாதனின் அற்புதமான சிருஷ்டிகளை விமர்சிப்பதின் பேரால் கண்டபடி எழுதும் பி, எஸ். ராமையா போன்ற பிற்போக்குப் பிண்டங்களை ஜீவா வன்மையாகக் கண்டித்தார்.

தலைவர் அருணசலக் கவுண்டர் தனது முடிவுரையில், தான் 30 வருடங்கள் தமிழ் பேராசிரியராக விருப்பதாகவும், தனக்கு இல்லாத தமிழ் புலமையை ஜீவானந்தம் பெற்றிருப்பதாகவும் கூறினர்,

கடைசியாக தோழர் எஸ். வேலாயுதம் அனைவருக்கும் நன்றி தெரிவித்துப் பேசினார்.

# தண்டனையும் அடக்குமுறையும்

## வள்ளுவர் காட்டும் வழி

இலக்கியம்

தண்டனை வேறு; அடக்குமுறை வேறு; உண்மையில் குற்றம் செய்கின்றவர்களை ஒறுப்பது தண்டனை; நீதிக்கு—நேர்மைக்கு—உரிமைக்குப் போராடுகின்றவர்களை அடக்குவதுதான் அடக்குமுறை. இவ்விரண்டைப்பற்றியும் திருவள்ளுவர் தெளிவாகத் தெரிவிக்கின்றார்.

இவற்றை விளக்கும் அதிகாரங்கள் மூன்று; அவை செங்கோன்மை; கொடுங்கோன்மை; வெருவந்த செய்யாமை என்பன. செங்கோன்மை—நீதியுடன் ஆளுவது; கொடுங்கோன்மை—நீதிக்கு மாறாக ஆளுவது; வெருவந்த செய்யாமை—அஞ்சத்தக்க செயல்களைச் செய்யாமை. இந்த மூன்று அதிகாரங்களிலும் உள்ள முப்பது குறள்களிலே தண்டனை என்பது என்ன? அடக்குமுறை என்பது என்ன என்பதைக் காணலாம்.

இந்த மூன்று அதிகாரங்களிலே செங்கோன்மையிலே தண்டனையைப்பற்றிக் கூறப்படுகின்றது. கொடுங்கோன்மையிலும், வெருவந்த செய்யாமையிலும் அடக்குமுறையைப்பற்றிக் கூறப்படுகின்றது.

ஒரு நல்ல அரசாங்கம்; அது குடிகளின் நன்மையையே குறிக்கோளாகக் கொண்டது. மக்களுடைய குறைகளைக் கண்டறிந்து அவைகளை ஒழிப்பதற்கே அல்லும் பகலும் முயற்சிசெய்கின்றது; நாடு எல்லாத் துறைகளிலும் முன்னேறுவதற்கான திட்டங்களை வகுத்து அவைகளை வெற்றியுடன் நிறைவேற்ற முனைந்து முயற்சி செய்கின்றது.

"குடிகளைப் பிறர் வருத்தாமல் பாதுகாக்கவேண்டும்; தானும் குடிகளைத் துன்புறுத்தக்கூடாது; அவர்களில் யாரேனும் குற்றவாளிகள் இருப்பார்களாயின் அவர்களைத் தண்டித்துக் குற்றத்தை நீக்கவேண்டும். இவ்வாறு செய்வதனால் அரசனுக்குக் குற்றம் உண்டாகாது; இது அரசனுடைய கடமை.

குடிபுறங்காத்து, ஓம்பிக், குற்றம் கடிதல்
வடுஅன்று வேந்தன் தொழில்.

(குறள் - 549)

ஆட்சியிலே அதிகாரம் பெற்றிருக்கும் சிலர் மக்களை ஆட்டு மந்தைகளாக மதித்து அடக்கியாள நினைப்பார்களாயின் அது கொடுங்கோலாட்சியாகத்தான் விளங்கும். மக்களை அதிகாரத்தைக் கொண்டும், படைபலத்தைக் கொண்டும் அடக்கிவிடலாம் என்று நினைப்பார்களாயின் அவர்கள் வெற்றிபெறமுடியாது. இது தனிப்பட்ட அரசனுடைய ஆளுகைக்கும் பொருந்தும். மக்கள் ஆட்சி என்னும் பெயரால் பொது மக்களை ஏமாற்றும் போலி அரசாங்கத்துக்கும் பொருந்தும்.

**சாமி சிதம்பரனார்**

அரசாங்கம் தனது படைபலத்தால் குடிகளை அடக்கிவைக்கலாம்; குடிகளும் ஆட்சியின் கொடுமைக்கு அஞ்சி நெஞ்சக் குமுறலுடன் அடங்கியிருக்கலாம்; ஆனால் இக்கொடுங்கோல் ஆட்சி என்றுதான் ஒழியுமோ என அவர்கள் கண்ணீர் விடாமலிருக்க முடியாது. ஆட்சியின் அல்லலைப் பொறுக்க முடியாமல் அவர்கள் சிந்தும் கண்ணீர் வீண் போகாது. அக் கண்ணீர் பொதுமக்கள் உள்ளத்திலே புகுந்து அவர்களைப் புரட்சியிலே குதிக்கும்படி செய்து கொடுங்கோலாட்சியைக் கவிழ்த்துவிடும். இது இயற்கை என்று கூறுகிறார் வள்ளுவர்.

"அடக்குமுறையால் அல்லற்பட்டு, அவ்வல்லலைப் பொறுக்க முடியாமல் அழுத கண்ணீரே அரசாங்கத்தின் செல்வத்தை அழிக்கும் ஆயுதம் அன்றோ?

அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர்
அன்றே
செல்வத்தைத் தேய்க்கும்படை.

(குறள் 455)

இதனால் எவ்வளவு பலம் பொருந்திய அரசாங்கமானாலும் அடக்குமுறையால் உயிர்வாழ முடியாது. அடக்குமுறையைக் கையாளும் அரசாங்கம் என்று பெயர் வந்துவிட்டாலே போதும். அது பொதுமக்களின் அன்பையும் மதிப்பையும் இழந்துவிடும். மக்களுடைய கருத்தறிந்து, மக்களுடைய நன்மைக்காகவே ஆட்சி நடத்தும் அரசாங்கம் அடக்குமுறையைக் கையாளவேண்டிய நிலைமை ஏற்படாது. அடக்குமுறை என்பது பொதுமக்களின் உரிமையை—அவர்களுடைய உரிமைப் போராட்டத்தை அடக்குவது என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

"நெடுங்காலம் ஆளும் பதவியிலே வீற்றிருக்க விரும்புகின்றவர் அதிகமாகத் தண்டிப்பது போலக் காட்டிக் குறைவாகத் தண்டிக்கவேண்டும்.

கடிது ஓச்சி மெல்ல எறிக;
நெடிது ஆக்கம்
நீங்காமை வேண்டுபவர்"

(குறள் 562)

இக்குறள் அடக்கு முறையைக் கையாள நேர்ந்தாலும் அதில் எத்தகைய தந்திரத்தைப் பின்பற்ற வேண்டும் என்பதைக் கூறிற்று.

ஆளுவோன் தன்னைக்காண வருவோர் அனைவரிடமும் அன்பாகப் பேசவேண்டும்; பழக வேண்டும்; கடுமொழி கூறி அடக்குமுறைத் தண்டனை விதிக்கும்போது அளவுக்கு மீறிய தண்டனைகளை அளிக்கக் கூடாது; இவைகளை ஒரு அரசன் கைக்கொண்டிருப்பானாயின் அவன் வலிமை அழிந்துவிடும்; அவன் வலிமை எவ்வளவு பலமானவையானாலும் நிலைத்து நிற்காது. கடுமொழியும், அளவுகடந்த தண்டனையுமே காரணமாக நின்று அவனுடைய வலிமையைத் தேய்த்து அழித்துவிடும் என்று கூறுகின்றார். இதனை

"கடுமொழியும் கையிகந்த தண்டமும்
வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.

(குறள் 567)

கடுமையான சொல்லும், அளவுக்கு மீறிய தண்டனையுமே, அரசனுடைய அடக்குமுறை வலிமையை அழிக்கும் அரமாகும்"

அரம் இரும்பைக் தேய்ப்பது போல அரசனுடைய வலிமையை அழித்துவிடும்.

இங்கே கூறியவற்றால் நாம் இரண்டு உண்மைகளை உணர்ந்து கொள்ளுகின்றோம்.

பொதுமக்களின் நேர்மையான வேண்டுகோளுக்குச் செவிசாய்க்காத அரசாங்கம் அவர்களுடைய கிளர்ச்சியை ஆயுத பலங்கொண்டு அடக்கி நசுக்குவது அடக்குமுறையாகும். இந்த அடக்குமுறையால் பொது மக்களை நசுக்கிவிட முடியாது. சில சமயங்களில் தவறான கிளர்ச்சிகளை அடக்க நேர்ந்தாலும், அது பயமுறுத்தலாகத்தான் இருக்கவேண்டும். கடுந் தண்டனையாக இருக்கக்கூடாது என்பது வள்ளுவர் கருத்து.

# மக்களுக்கு வாழ்வளிக்கும்

## இலக்கிய சிருஷ்டி வேண்டும்

### நெல்லையில் ஜீவா பேச்சு

காலஞ்சென்ற சிறுகதை எழுத்தாளர் புதுமைப்பித்தன் தினம் கடந்த 10-7-55 ஞாயிற்றுக்கிழமையன்று நெல்லை ஹிந்துக் கல்லூரியில் சிறப்பாக நடந்தேறியது.

அதை ஒட்டி நடந்த சிறப்புக் கூட்டத்திற்கு தமிழ்ப் பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் தலைமை வகித்தார். அவரது தலைமையுரையில், புதுமைப்பித்தனுடன் தான் கொண்டிருந்த நட்பையும், அவரது சிறந்த எழுத்து வன்மையைப்பற்றியும் பேசினார்.

அடுத்து புதுமைப்பித்தனின் வாரிசு என்று அழைக்கப்படுபவரும், 'சாந்தி' ஆசிரியருமான தோழர் ரகுநாதன் பேசுகையில், சமூகத்தின் அடித்தட்டிலே வாழ்ந்த மக்களுக்காக புதுமைப்பித்தன் கதை, கட்டுரை, கவிதைகள் தீட்டினாரென்றும் புதுமைப்பித்தன் படித்த இந்துக் கல்லூரி மாணவர்கள் அவரைப்போல் மேதாவிலாசத்துடன் விளங்க வேண்டுமென்றும் கூறினார். அடுத்து புதுமைப்பித்தனின் அந்திம நாட்களில் அவருக்குப் பேருதவி செய்தவரும் சிறந்த கலாரசிகருமான திருவனந்தபுரம் எஸ். சிதம்பரம், புதுமைப்பித்தனின் கடைசி நாட்களைப்பற்றி உருக்கமாகப் பேசினார்.

#### தோழர் ஜீவா

அடுத்து தோழர் ஜீவானந்தம் பேசினார். அவர் பேசியதின் சுருக்கமாவது: புதுமைப்பித்தன் எனது பழம் நண்பர். தேசீய இயக்கத்தின் பெரு வெள்ளம், பிறந்த மண்ணின் வாடை, மொழி வளம் முதலிய அனைத்தும் புதுமைப்பித்தனின் சிருஷ்டிகளில் இணைந்து பிணைந்து நின்றன. புதுமைப்பித்தன் ஒரு சிறந்த எழுத்தாளர் மட்டுமல்லாது, சிறந்த மொழி பெயர்ப்பாளராகவும் விளங்கினார். மொழிபெயர்ப்பது சுலபமான வேலை அல்ல. மூலத்தின் சுவை குன்றாது மற்ற மொழிகளிலிருந்து மூல ஆசிரியரின் கருத்தைக் கொண்டுவரல் வேண்டும். அன்றைய எழுத்தாளர்கள் 'மொழி'யைத்தான் பெயர்த்தார்கள். (சிரிப்பு)

மொழிபெயர்ப்பின்பேரால் சிலர் உருவத்தையே பெயர்த்தார்கள்; சிலர் கருத்துக்களையும், கதைகளையும் பாத்திரங்களையுமே பெயர்த்துக்கொண்டிருந்தார்கள். புதுமைப்பித்தன் இவர்களிலிருந்து மாறுபட்டவர்.

#### தமிழ் இனிமை

அவர் சாக்கடையில் புரளும் மனிதர்களின் மனித உள்ளத்தை எடுத்துக்காட்டினார். அவரது கதைகளில் சமூகத்தின் அடித்தட்டிலே கிடந்த மக்களை வெளியுலகிற்கு காட்டினார். மற்ற எழுத்தாளர்கள், தொடக் கூசுகின்ற பார்க்க மறுத்த விஷயங்களை புதுமைப்பித்தன் பார்த்தார், எழுதினார். அவர் ஒரு சிறந்த விமர்சகர்; இலக்கிய கர்த்தா. அவரது எழுத்து நடை அசாதாரணமானது. ஏராளமான கதைகளை அவர் எழுதினார். அவரது எழுத்துக்களில் தமிழ் இனிமை சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றது.

எழுத்தாளன் என்றால் தான் வாழும் காலத்தில் மக்களின் சாதனைகளையும், முன்னேற்றங்களையும் அவர்களது துன்ப துயரங்களையும், அவர்கள் முன்னேறும் மார்க்கத்தையும் எழுத வேண்டும். அவன்தான் உண்மையான இலக்கிய கர்த்தா.

நம் தமிழ்நாட்டின் கவிகள் பலரும், தமிழன் வாழ்வை, தமிழன் பண்பாட்டை, நாகரீகத்தை, கலாசாரத்தை தங்களது ஒப்பற்ற சிருஷ்டிகளிலே சிருஷ்டித்துவிட்டுச் சென்றிருக்கிறார்கள். அவர்கள் காவிரிப்பூம்பட்டினத்தை வாணிபத்தின்மூலம் உலகத்துக்குக் காட்டினார்கள். அவர்கள் நாகரீகத்தைக் கண்டார்கள். தமிழ் செல்வங்களை தமது இலக்கியத்திலே வடித்தார்கள். வள்ளுவரின் இலக்கியத்திலே நாம் இதைப் பார்க்கலாம். அது தனித்தமிழ் என்று கூறுபவர்கள் கூறட்டும். வள்ளுவர் தனது, 1330 குறளிலும் தமிழைப்பற்றிக் கூறவில்லை. எனினும் அது தமிழ். தமிழன் பண்பாட்டை குறளில் நாம் பார்க்கிறோம். சிறந்த மக்கட் செல்வங்களை, வாழ்க்கையில் வேரூன்றிய செல்வங்களை நாம் பார்க்கிறோம். வள்ளுவன் புகழ் வான்புகழ் கொண்டது. ஏனென்றால் அது சமுதாய வாழ்வில் வேரூன்றியிருக்கிறது.

#### பழைய இலக்கியங்கள்

அடுத்து, ஜீவா, தமிழகத்தில் காலத்தால் முற்பட்ட, இலக்கியங்களான, மணிமேகலை, சிலப்பதிகாரம் ஜீவகசிந்தாமணி, தேவாரம், திருவாசகம் முதலிய இலக்கியங்களின்உள்ளடக்கத்தைப்பற்றி பக்தர்களும், ஆராய்ச்சியாளர்களும், மூக்கில் விரலை வைத்து அதிசயப்படும் வகையில் எடுத்துக் கூறினார்.

பிறகு கம்ப ராமாயணத்தைப் பற்றி ஜீவா பேசினார். கம்பராமாயணம் தமிழகத்தின் ஒரு பேரிலக்கியம் என்பதை திராவிட இயக்கத் தோழர்கள் உணரவேண்டும் என்று ஜீவா கூறியதும் வந்திருந்த மக்கள் வானதிர கரகோ

(9-ம் பக்கம் பார்க்க)

# உலக வாலிபர் விழாவில்

## தமிழகக் கலைஞர்கள்

நண்பர்களே! 5வது உலக வாலிபர்கள்—மாணவர்களின் திருவிழா ஆரம்பமாகிவிட்டது!

ஜூலை 31 முதல் ஆகஸ்டு 14-ந் தேதிவரை வார்ஸா திருநகர் இளைஞர்களின் பெருந்திரளால் நிரம்பிவழியும். ஜாதி, மத, இன, நிற, பால் வேற்றுமைகளின்றி உலகின் எல்லா நாடுகளிலிருந்தும் இத்திருவிழாவிற்கு பிரதிநிதிகள் வருகிறார்கள்.

**யார் யார் பிரதிநிதிகள்?**

புட்பால், வாலிபால், ஹாக்கி, கிரிக்கெட், பாட்மிட்டன், சடுகுடு, சிலம்பம், சதுரங்கம் பொம்மலாட்டம், கரகம் இன்னும் எண்ணற்ற விளையாட்டுக்களில் நிபுணர்கள், சிறந்த பாடகர்கள், நாடக, சினிமாக் கலைஞர்கள், நடன மேதைகள், புகழ்பெற்ற விஞ்ஞானிகள், தொழிற்சங்கத் தலைவர்கள், சர்க்கஸ்காரர்கள், குஸ்தி நிபுணர்கள், பல்வேறு தொழில்களைச் சேர்ந்த இளம் தொழிலாளர்கள்... இன்னும் பல்லாயிரக்கணக்கில் கூடுகிறார்கள். தங்கள் தங்கள் நாட்டு விளையாட்டுக்களையும் கலாசாரத்தையும் வார்சாவிலே நன்கு பிரதிபலித்து "சமாதானத்திற்கும் நட்புறவிற்காகவும் அன்புடனும் ஒற்றுமையுடனும் இருக்க வாலிபர்களும் மாணவர்களும் திரண்டுவருகின்றனர். உலகின் எதிர்காலத்தை உருவாக்கும் மாபெரும் சக்தி இளம் வாலிபர்கள், மாணவர்கள் கையில் அல்லவா இருக்கிறது!

அப் புனிதக் கடமைக்காக, உலகின் குமுறலைத் தணிப்பதற்காக, உலக சமாதானத்திற்காக ஒன்று கூடப்போகிறார்கள்.

**தமிழகத்திலிருந்து!**

இந்திய வீணையின் மகிமையை, அதன் கீதநாதத்தின் செழிப்பை, ஹெல்சிங்கி உலக சமாதான மகாநாட்டின் 20,000 பேர் அடங்கிய கூட்டத்திலும், மாஸ்கோ ரேடியோவில் 1 மணி நேரம் கொடுக்கப்பட்டும, இன்னிசையில்மூழ்கிய ரஷ்ய அதிகாரிகள் மேலும் அரை மணி நேரம் கொடுத்து $1\frac{1}{2}$ மணி நேரம் வரையும் வீணை கானம் பொழிந்த வீணை பாலச்சந்திர் அவர்களும்—மேற்கு ஜெர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து மற்றும் முற்றுமுள்ள மேற்கு ஐரோப்பிய நாடுகளில் இந்திய நாட்டின் இணையற்ற பரத நாட்டியக் கலையைக் காண்பித்துப் புகழ்பெற்ற திருமதி லீலா ராமன் பி.ஏ. ஹானர்ஸ் அவர்களும்—சென்னை ராஜ்ய புட்பால் பெடரேஷன் முன்னாள் காரியதரிசி திரு. என். விட்டல் அவர்களும்—பிரபல சினிமா நடிகர் திரு. ரஞ்சன் அவர்களும் தமிழகத்திலிருந்து சென்றிருக்கிறார்கள்.

மாணவர்ச் சங்கங்களும், மன்றங்களும், விளையாட்டு சங்கங்களும் இவ்விஷயத்தில் முன் முயற்சி எடுத்து இளம் வாலிபர்களையும் ஒன்றுதிரட்டி இவ் விழாவைக் கொண்டாட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

திருப்பூர் தயாரிப்புக் கமிட்டியானது சிறந்த முறையில் ஸ்தல விழாக் கொண்டாடியுள்ளது. விரைவிலேயே சென்னையும் விழா நடத்த நிதி உதவியும் இதர துறைகளிலும் உதவுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

**கார்வண்ணன்,**
பொதுச்செயலாளர்,
சென்னை தயாரிப்புக் கமிட்டி,
9–162-A, இராயப்பேட்டை,
ஹைரோடு, சென்னை-4.

# "ஜனசக்தி" தினசரி நிதி வசூல்

## 28-7-55 முடிய மொத்த வசூல் ரூ. 56,460—1—1

| ஜில்லா | இந்த வார வசூல் | | | இதுவரை மொத்த வசூல் | | |
|---|---|---|---|---|---|---|
| 1. சென்னை ... | 10 | 0 | 0 | 1,496 | 5 | 3 |
| 2. செங்கற்பட்டு ... | | | | 183 | 0 | 0 |
| 3. வட ஆற்காடு ... | 4 | 0 | 0 | 870 | 0 | 9 |
| 4. தெ. ஆற்காடு ... | | | | 651 | 0 | 0 |
| 5. தஞ்சை ... | | | | 6,390 | 6 | 10 |
| 6. திருச்சி ... | 542 | 0 | 0 | 3,273 | 11 | 3 |
| 7. சேலம் ... | 13 | 8 | 0 | 2,507 | 11 | 3 |
| 8. கோயமுத்தூர் ... | 98 | 8 | 0 | 9,492 | 12 | 0 |
| 9. மதுரை ... | 1107 | 0 | 0 | 16,746 | 11 | 3 |
| 10. ராமநாதபுரம் ... | | | | 4,854 | 15 | 3 |
| 11. திருநெல்வேலி ... | 173 | 12 | 0 | 8,036 | 3 | 3 |
| 12. திரு-தமிழகம் ... | | | | 165 | 15 | 0 |
| 13. புதுச்சேரி ... | | | | 1,026 | 5 | 0 |
| 14. இதர மாகாணங்கள் வெளிநாடுகள் முதலிய | | | | 607 | 12 | 0 |
| 15. இதர வசூல்கள் ... | | | | 157 | 4 | 0 |
| ஆக ரூ. | 1948 | 12 | 0 | 56,460 | 1 | 1 |

# 2 லட்ச நிதி வசூல்

## ஜில்லா வாரியான விபரம்: (28-7-55 முடிய வசூல்)

### சென்னை ஜில்லா

ஜனசக்தி பிரஸ் யூனிட்: தாமோதரம் மூலம்: கோதண்டன் ரூ. 5; பார்த்தசாரதி ரூ. 5; ஆக ரூ. 10;

### வட ஆற்காடு ஜில்லா

**சென்ராம்பள்ளி:** முனுசாமி சௌதரி ரூ. 1.

**வேலூர்:** தோழர் வி. எஸ். கிருஷ்ணன் மூலம் பேமி ரோஸ் பிடித் தொழிலாளிகள் ரூ. 2–8–0; எஸ். பாஷா அணா 8; ஆக ரூ. 3;

### திருச்சி ஜில்லா

**திருச்சி** டவுன் வசூல் ரூ. 10; கிளியூர் ரங்கசாமி திருமண நன்கொடை ரூ. 10; காவேரி நகர் மில் தொழிலாளிகளிடம் வசூல் ரூ. 501; ஆக ரூ. 521.

**மணப்பாறை:** எஸ். ஆரோக்கியம் ரூ 3; அப்யாக்கண்ணு ரூ. 5; ஆர். வெள்ளையன் ரூ. 2; பெரியய்யா ரூ. 1; தங்கப்பிரகாசம் ரூ. 3; பெருமாள் ரூ. 5; சின்னு ரூ. 2; ஆக ரூ. 21.

### மதுரை ஜில்லா

**மதுரை நகர்:** தோழர் எம். என். ஆகிநாராயணன் மூலம் ஒரு அனுதாபி (தூத்துக்குடி) ரூ. 5.

சீத்தாராம் நாயுடு ரூ. 5; கே. ரத்தினம் செட்டியார் ரூ. 5; சித்திரா போட்டோ ஸ்டூடியோ ரூ. 5; மல்லைபா ரூ. 1; டி. அழகர் ரூ. 3; காளியப்பன் ரூ. 1; ஆக ரூ. 20;

**பழனி தாலுகா:** அத்திக்கோம்பை: எஸ். பழனியப்ப கவுண்டர் ரூ. 10; ர. குள்ளப்ப கவுண்டர் ரூ. 5; மடுகிரும்பட்டி எஸ். கே. நாராயணசாமி ரூ. 10; குமராயூர் அப்புசாமி கவுண்டர் ரூ. 5; கணக்கன்பட்டி—ஒரு அனுதாபி ரூ. 5; ஜகநாதன்; கருப்பண்ணன் தலா ரூ. 1.

**பழனி:** டெய்லர் ராஜன் ரூ. 2–8–0. பி. பழனிசாமி கவுண்டர், பி. பொன்னுசாமி கவுண்டர் தலா ரூ. 1: பி. ஷண்முகம்–சரஸ்வதி திருமண நன்கொடை ரூ. 2; விஜயகுமார் மில்ஸ் போத்தல் ராஜு ரூ. 3; டி. பி. முத்து ரூ. 2: மொல்லம்பட்டி துரைசாமி ரூ. 1; பழைய ஆயக்குடி 2வது வார்டு தோழர்கள் ரூ. 1–8–0; எரமநாயக்கன்பட்டி செ. ரா. நாச்சிமுத்து ரூ. 1; ஆக ரூ. 52. கணக்கன்பட்டி குப்புசாமி கவுண்டர் ரூ. 10; அருணாசலம் ரூ. 5; ஆயக்குடி பாஸ்கரன் ரூ. 4; பழனி அப்துல் பாரி ரூ. 1; விஜயகுமார் மில்ஸ் கட்சி அனுதாபிகள் உண்டியல் வசூல் ரூ. 10; ஆக ரூ. 30.

**உத்தமபாளையம்:** எம். ஜமால் மொகிதீன் ரூ. 1000;

# தோழர் ஜமால் மொய்தீன் ஜனசக்தி நிதிக்கு ரூ. 1000

மதுரை ஜில்லா உத்தமபாளையம் தோழர் **எம். ஜமால் மொய்தீன்** ஜனசக்தி தினசரி நிதிக்கு ரூபாய் 1000 கொடுத்துள்ளார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவருக்கு தமிழ்நாடு மாகாணக் கமிட்டியின் சார்பில் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**எம். ஆர். வெங்கட்ராமன்**

### சேலம் ஜில்லா

**நாமக்கல்:** பி. எஸ். எஸ். மணிமூலம் வசூல்: ஐ. பி. குப்புசாமிக் கவுண்டர் ரூ. 3; சி. நல்லியப்பன், கந்தசாமிப் பிள்ளை, பி. காந்திமதி, எஸ். கந்தசாமிக் கவுண்டர், எஸ். ராமசாமி தலா ரூ. 2; எம். ஏ. பி. அர்த்தநாரி அணா 8 ஆக ரூ. 13–8–0.

### நெல்லை ஜில்லா

**தூத்துக்குடி:** தோழர் எஸ். ஏ. முருகானந்தம் மூலம்: மீனாட்சியா பிள்ளை, வேலுச்சாமி, கருப்பசாமி ஆச்சாரி தலா ரூ. 1; முத்துசாமி செட்டியார் அணா 8 ஆக ரூ. 3–8–0.

**ஏரல்:** எம். ஏ. ஜப்பார் மூலம்: சூழமாநகர் என். ஏ. ஜலீல், வாழவல்லான் அதிவீரபாண்டி, செபத்தையாபுரம் ராஜாபிச்சாண்டி, பி. எம். மோல்தீன் தலா ரூ. 1; சு. அருணாசலம் ரூ. 2; எஸ். கே. அப்துல் ஹமீது-கமருன்னிஷா திருமண நன்கொடை ரூ. 2 ஆக ரூ. 8.

**எட்டயாபுரம்:** தோழர் எஸ். உலகநாதன் மூலம்: எஸ். உலகநாதன், எஸ். மகாலிங்கம் தலா ரூ. 5; ஒரு அனுதாபி, ஆரண்குடி ஏ. குருசாமி தலா ரூ. 2; எம். கருப்புசாமி ரூ. 1–8–0 ஆக ரூ. 15-8-0.

**ஸ்ரீவைகுண்டம் யூனிட் வசூல்:** ஸ்ரீவைகுண்டம் வக்கீல் தனசிங் (2-வது தடவை) ரூ. 1–4–0; தோழர் டி. ஆர். எஸ். உடைய மாலெங்கோவ் பட விற்பனை அணா 8; இருளப்பன் லெனின் படவிற்பனை அணா 8; மருகால்தலை பூலுத்தேவர் ரூ. 1;

**நாசரேத்:** செல்லையா ரூ. 1; ஒரு மாணவர் அணா 8; ஆழ்வார் திருநகரி அனுதாபி ரூ. 1; திருச்செந்தூர் பேச்சிமுத்து ரூ. 5; காயல் பட்டணம் ஏ. எம். ஷேக்கு ரூ. 1. ஆகமொத்தம் ரூ. 11–12–0;

**கோவில்பட்டி தாலுக்கா:** ஆ. ராமசாமி ரூ. 31; மு. ராக்கப்ப மணியக்காரர் ரூ. 10; ரா. நாருயண நாயக்கர், மணிமுத்து தலா ரூ. 5; ஆ. முத்தையா ரூ. 4; வெ. வெங்கடசாமி நாயக்கர், ரெ. கு. முத்தையா மணியக்காரர் தலா ரூ. 5; கா. ராக்கப்ப மணியக்காரர் ரூ. 1; வெ. தங்கக்குமார் ரூ. 3; கணபதி ரெ. கு. மு, 15; சு. முத்துராக்கு பெ. ரா. முத்தையா மணியக்கார் தலா ரூ 5; பெ. சி. குருசாமி ரூ. 2; கசவன்குன்று பொதுமக்கள் தந்த கேப்பை விற்று வரவு ரூ. 9 ஆக ரூ. 105.

### கோவை ஜில்லா

**ஈரோடு;** 18–7–55 அன்று காரைவாய்க்கால் மைதானத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் எம். கல்யாணசுந்திரம் எம். எல். ஏ. அவர்களிடம் "ஜனசக்தி" தினசரி நிதிக்காக கொடுக்கப்பட்ட ரூபாய் விபரம்:

ஒரு அனுதாபி, திரு எம். சின்னப்பன் அவர்கள் (சூரம்பட்டி பஞ்சாயத் போர்டு தலைவர்), திரு இ. எஸ். முத்துசாமி அவர்கள் தலா ரூ. 10. தோழர் சி. எம். வெங்கடாசலம் மூலமாக ரயில்வே தொழிலாளர்கள் ரூ. 20. கே. பி. ராமநாதன் (ஜீவா சைக்கிள் ஷாப்), ஆர் ரங்கசாமி (லாரி ஓனர்), மோளக்கவுண்டம் பாளையம் தோழர் ஆறுமுகம், எஸ். காளியப்பன்–குப்பாயம்மாள் திருமண நன்கொடை, ஐநாரப்பன் கோவில் வீதி பி, நாச்சிமுத்து அவர்கள் தலா ரூ. 5. காங்கிரசான்புதூர் எஸ். ஏ. பி. மூலம் ரூ. 3–8–0, வேலாயுதம் (மோட்டார் மெக்கானிக்) ரூ. 3; ஒரு அனுதாபி அவர்கள், சங்கு எஸ். சேதுராமன், சூரம்பட்டி தோழர் எம். ஆர். பழனியப்பன், கைக்கோலந் தோட்டம் எம். நாகப்பன் தலா ரூ. 2: எஸ். வடிவேல்–சரஸ்வதி திருமண நன்கொடை ரூ. 2; ஆர். சண்முகம் கடலைவறுக்கும் தொழிலாளி பொள்ளாச்சி, சூரம்பட்டி தோழர் என். சின்னத்தம்பி, கோட்டை ராஜகோபால், சிவகிரி கட்சி அனுதாபிகள், காசிபாளையம் கே. எம். முருகேஸ், அனுமன்பள்ளி பி. கிருஷ்ணசாமி, கருங்கல் பாளையம் அனுதாபி ஒருவர் தலா ரூ. 1. ஆக ரூ. 98–8–0;

# ஈரோடு நடேசா மில்லில் உள்ளிருப்பு ஸ்ட்ரைக்

ஈரோடு நடேசா, ஸ்பின்னிங் அண்டு வீவிங் மில்லில், மனிதத் தன்மையில்லாத சில மேஸ்திரிகள், மில் நிர்வாகத்தின் தூண்டுதலின்பேரில், தொழிலாளர்களை "டா" போட்டு கூப்பிடுவதும், கெட்ட வார்த்தைகளால் திட்டுவதும், மிஷினை வேகமாக ஓடச் செய்து, லத்தாடு விழச்செய்து, தொழிலாளிகளைக் கஷ்டப்படுத்துவதும், தொழிலாளிகளை அடிப்பதும், போலீஸில் புகார் செய்வதும், நிர்வாகத்திடம் புகார் சொல்லி சஸ்பெண்டும் அபராதமும் வாங்கிக்கொடுப்பதுமாயிருக்கிறார்கள்,

இந்த அக்ரமங்களைக் கண்டித்து தொழிலாளர்கள் பொங்கியெழுந்தார்கள். 19–7–55ல் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து எதிர்ப்பைக்காட்டினர். மெஷினை வேகமாக ஓட்டுவதால் வேலை செய்ய இயலாமல் கஷ்டப்பட்ட தொழிலாளர்களை, கீழ்ப்படிய மறுத்ததாகக் குற்றம் சாட்டி கதவடைப்பு செய்தார்கள்.

ஊரே குலுங்கும் வண்ணம் 21-7–55-ல் ஊர்வலம் நடைபெற்றது. பாக்டரி முன் கூட்டமும் நடைபெற்றது. தோழர் கே.டி.கே. தங்கமணி பேசினர். 21–7–55ல் இரண்டாவது ஷிப்ட் திறந்து வேலை நடைபெற்றது.

# சென்னைத் துறைமுகப் பெண் தொழிலாளர் இருவரை போலீஸ் சார்ஜெண்டுகள் கற்பழித்தனர்

27–7–55 இரவு 10-30 மணிக்கு வேலை செய்து கொண்டிருந்த துறைமுகத் தொழிலாளர் சிலரை ஹார்பர் எம். டிவிஷன் போலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த ஷண்முக சுந்தரம், சபாஸ்டின் என்ற இரு சார்ஜெண்டுகள் வரிசையாக நிறுத்தி டோக்கன்களை சோதித்து பிறகு 2 பெண் தொழிலாளர் 4 ஆண் தொழிலாளர், ஒரு பையனை நிறுத்தி வைத்துக்கொண்டு மற்றவர்களை அடித்து விரட்டிவிட்டனர். பிறகு சற்றுதூரம் சென்று 4 ஆண் தொழிலாளரையும், பையனையும் விரட்டிவிட்டு, இரு சார்ஜெண்டுகளும் இரு பெண் தொழிலாளர்களை அழைத்துச் சென்று கற்பழித்தனர் என்று தெரிகிறது.

இச் செய்தி தீப்போல் ஹார்பரில் பரவவே, எண்ணற்ற மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர் கப்பலில் வேலை செய்துகொண்டிருந்ததை நிறுத்திவிட்டு கற்பழித்த ஆளைப் பிடித்து சங்கத்திற்கே அழைத்துவந்தனர். மற்றொரு சார்ஜெண்ட் ஓடி விட்டார்.

அசிஸ்டெண்டு கமிஷனர் முதலானோர் தகவல் அறிந்து வந்து இரு சார்ஜ்ஜெண்டுகளையும் கைது செய்துள்ளனர். சார்ஜெண்டுகள் நன்ருகக் குடித்திருந்தார்கள் என்று தெரிகிறது,

மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கப் பொதுக் காரியதரிசி தோழர் ஏ. எஸ். கே. அய்யங்கார் இரவு 1-30 மணிக்கு எழுத்து மூலம் நடந்த பூரா விபரங்களையும் போலீஸ் கமிஷனருக்கும், போர்ட்டிரஸ்ட் சேர்மனுக்கும், போர்ட்டிரஸ்ட் டிராபிக் மானேஜருக்கும் உடனே அனுப்பியுள்ளார்.

போலீஸ் அதிகாரிகள் விசாரித்து குற்றவாளிகளை கடுமையாக தண்டிக்கவேண்டும். இம்மாதிரியான சம்பவம் இனி நடைபெருமல் பார்த்து தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும்.—ந-நி.

# நெய்வேலி உரம் உற்பத்தி மந்திரி கூறுகிறர்

இந்திய சர்க்காரின் செயற்கை உர உற்பத்திக் கமிட்டியினர், "தெற்கே ரஸாயன உர உற்பத்தி தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு மிகச் சிறந்த இடமாக நெய்வேலி இருக்கிறது" என்று சர்க்காருக்கு யோசனை கூறியிருப்பதாக உற்பத்தி மந்திரி கே. சி. ரெட்டி 25–7–55ல் லோக் சபையில் தெரிவித்தார்.

# புதுவையில் வெற்றி . . .

(முதல் பக்கத் தொடர்ச்சி)

கான பெண்கள் புடைசூழ அடுத்த கிராமத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

காங்கிரஸ் வான்களில் நாள் தவருமல், தெருத்தவருமல் கிராமம் தவருமல் மைக் வைத்துப் பிரச்சாரம் செய்தார்கள். ஆனல், கேட்பார்தான் இல்லை. ஆனல் மக்கள் முன்னணி கடைசிக் கட்டத்தில் ஒரு தொகுதி, ஒருநாள் மைக் வைத்து பிரசசாரம் செய்ய சென்ற காலத்தில் எங்கள் தெருவிற்கு வாருங்கள், எங்கள் தெருவிற்கு வாருங்கள் என்றழைத்துச் சென்று நூற்றுக்கணக்கிலே திரண்டு நின்று ம. மு. ஊழியர்கள் பேசுவதை புன்முறுவல் பூத்த முகங்களுடன் கேட்டனர். ஜூலை 17-ந்தேதி நடந்த ஊர்வலத்திலும் கூட்டத்திலும் கொட்டும் மழையையும் பாராது, பல மைல்கள் நடந்து வந்து ஆயிரமாயிரமாக அணிதிரண்ட ஆண்களும் பெண்களும் தங்களின் தளராத உறுதியை, மக்கள் முன்னணிக்குத் தங்களுக்குள்ள இதயபூர்வமான ஆதரவை தெட்டத் தெளிவாகக் காட்டிவிட்டனர்.

### அமோக வரவேற்பு

இவ்விதமே புதுவை மக்கள் தலைவர் தோழர் சுப்பையா கிராமம் கிராமமாக பிரச்சாரம் செய்யச் சென்றகாலத்தில் அவருக்களித்த வரவேற்பு காங்கிரஸ் அணியே ஒரு கலக்கு கலக்கியது. இவ்விதம் பொறுமையாக அமைதியாகவும், ஆத்திரமூட்டலுக்கிரையாகாமலுமிருந்து, தேர்தல் நாளன்று, காலை 4 மணிக்கே எழுந்து, பெண்களும், ஆண்களும் நூற்றுக்கணக்கில் ஓட்டுச் சாவடிகளுக்கு சென்று கொடிய வெயிலில் காத்திருந்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாகவிருந்தது. ரௌடித்தனத்திற்கும், குபேரின் கொடூரங்களுக்கும் பதில் யானைப் பெட்டியை (ம. மு. வின் பெட்டி) நிரப்புவதுதான் என்று உறுதி பூண்டு சென்றனர் மக்கள் ஓட்டுச் சாவடிக்கு. அதன் விளைவு மக்கள் முன்னணியின் மகத்தான வெற்றி.

புதுவைப் பிரதேசத்திற்குள்ள 22 அசெம்பிளி ஸ்தானங்களில் 12 கம்யூனிஸ்ட் கட்சி உள்ளிட்ட மக்கள் முன்னணிக்கும், 2 ம.மு. ஆதரித்த சுயேச்சைகளுக்கும் கிடைத்துள்ளது. புதுவை நகரிலும் தொழிலாளர் நிறைந்த முதலிபார்பேட் கொம்யூனிலும் காங்கிரசுக்கு ஒரு ஸ்தானமும் கிடைக்க வில்லை. செல்லானின் தேசிய காங்கிரசுக்கு எங்குமே ஒரு ஸ்தானமும் கிடைக்கவில்லை.

கம்யூனிஸ்ட் கட்சி பிரதான பாத்திரம் வகித்து வரும் மக்கள் முன்னணிக்கு பாண்டிச்சேரி நகரில் ஆறில் ஐந்து ஸ்தானங்களும், முன்னணியால் ஆதரிக்கப்பட்ட அபேட்சகருக்கு ஆருவது ஸ்தானமும் கிடைத்தன. மேயர் முத்துப் பிள்ளை நகரில் தோற்கடிக்கப்பட்டார். தோழர் ரங்கநாதன் போட்டியிட்ட தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகர் ஜாமீனை இழந்தார்.

### அதிகாரங்களை விஸ்தரி

குபேர் தான் தேர்ந்தெடுக்கப்பட்ட பாஹோர் தொகுதியில் மக்கள் முன்னணி அபேட்சகர் ஜீவரத்தினத்தைவிட 153 வோட்டுகளே அதிகமாகப் பெற முடிந்தது, அதுவும் செல்லான் நாயக்கர் கட்சி அபேட்சகருட்பட்ட மும்முனைப் போட்டியால். போட்டியைத் தவிர்க்க எவ்வளவு முயன்றும் செல்லான் பிடிவாதமாயிருந்தார். ஆனல் குபேர் முனிசிப்பல் தேர்தலில் தோல்வியடைந்தார்.

தேர்தல்கள் முடிந்தன. ஆகஸ்ட் 15ந் தேதி சட்டசபை கூடும். இந்த சட்டசபையிடம் இந்திய சர்க்கார் அதிகமான அதிகாரங்களை ஒப்படைக்குமா என்பது கேள்வி. இன்றிருக்கும் நிலையில் சட்டங்களை நிறுவ இதற்கு அதிகாரமில்லை, ஆறு பேர்கொண்ட மந்திரிசபை ஆலோசகர்களாகவே இயங்கலாம். இதில் மூவர் ஹைகமிஷனரால் நியமனம் செய்யப்படுபவர்கள். மூவர் சட்டசபையால் தேர்ந்தெடுக்கப்படுவோர்.

நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றக் கூடச் சட்டசபைக்கு அதிகாரமில்லை. இது தான் பிரெஞ்சு கட்டுக்கோப்பு. இந்திய சம்பிரதாயங்களை ஒப்ப இந்திய ராஜ்யங்களிலுள்ள சட்டசபைகளுக்குரிய அதிகாரங்களை இந்த சட்டசபைக்கு இந்திய சர்க்கார் அளிக்குமா? இன்னும் சட்டபூர்வமாக இப்பகுதியை ஏற்றெடுக்கவில்லை என்று சாக்குப் போக்குக் கூறுவார்களா? சட்டசபையின் அதிகாரங்களை விஸ்தரிக்கவேண்டும் என்று மக்கள் கிளர்ச்சி ஓங்கவேண்டும்.

—வி. பி. சிண்டன்.

# நம்பிக்கைதரும் நால்வர் மகாநாடு

## கெடுபிடி யுத்தம் குறைந்தது
## சமரசப் பாதை வென்றது

ஆறு நாட்கள் அகில முற்றுமுள்ள மக்களின் கண்ணையும், கருத்தையும் ஒருங்கே ஆகர்ஷித்திருந்த சரித்திர முக்கியத்துவம் பெற்ற நால்வர் மகாநாடு முடிவடைந்தது. கெடுபிடி யுத்தத்தின் வேகம் குறைந்தது. தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினைகளுக்கு முடிவுகாணவிட்டாலும் சமாதான சகஜீவனம்தான் உலக முற்றிற்கும் உகந்த கோட்பாடு என்பது பொதுவாக அங்கீகாரம் பெற்றது.

பிரச்சினைகளைப் பொறுமையுடன் ஆராய்ந்து சமரசப் பேச்சு வார்த்தைகள் மூலம் சுமுகமான தீர்வு காண வேண்டும். போர்வழியில் இறங்கக்கூடாது என்ற பொது உடன்பாடு உதித்தது. யுத்தப் பேரபாயத்தை அகற்றி, நம்பிக்கையும் நல்வாழ்வும் உத்தரவாதம் செய்யும் திசைவழியில் உலக மக்கள் நடைபோட்டுச்செல்ல வாய்ப்புக் கிடைத்தது.

நான்கு வல்லரசுகளின் தலைவர்கள் பத்தாண்டுகளுக்குப் பிறகு கூடிப் பேசியது சரித்திரத்தில் ஒரு திரும்புமுனை. ஒரு பாதையின் சங்கமம்; இன்னுமொரு பாதையின் ஆரம்பம்.

தீர்வு காணவேண்டிய ஸ்தூலமான சர்வதேசப் பிரச்சினைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. நிகழ்ச்சிமுறை தகராறுக்கு இடந்தராமல் பரஸ்பரம் விட்டுக்கொடுத்து நிர்ணயிக்கப்பெற்றது. மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருந்தபோதிலும் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டனர். ஒத்துழைப்புச் சூழ்நிலையை சிருஷ்டித்தனர். உண்மையான ஆர்வத்துடன் மனப்பூர்வமாக உளம் விட்டுப் பேசினர். ஆழ்ந்த கவலையுடன் செயலாற்றலில் கருத்துடன் விவாதித்தனர். ஜெனிவா நகரத்தில் ஐக்கிய நாடு சபையின் மாளிகையில் நடைபெற்றது நால்வர் மகாநாடு.

பேச்சு வார்த்தைகளின் முடிவில் ஒரு கூட்டறிக்கை வெளியிடப்பெற்றது. வருங்காலப் பணிகளுக்குரிய உண்மையானமேடையாக இது திகழ்ந்தது. நாடுகளிடையே உள்ள உறவுகளைச் சீர்படுத்தி அபிவிருத்தி காணத் தளம் அமைத்தது. இந்த அறிக்கை இப்பிரச்சினைகளுக்கெல்லாம் தீர்வு காண்பதற்காக அக்டோபர் மாதத்தில் கூடப்போகும் வெளி விவகார மந்திரிகள் கூட்டத்திற்கு அடிப்படையாக அமையும். இதன் சுருக்கம் வருமாறு:

பிரான்ஸ், பிரிட்டன், சோவியத் யூனியன், அமெரிக்கா ஆகிய நான்கு நாடுகளின் தலைவர்களும் சர்வதேச நெருக்கடி தணியவேண்டும், நாடுகளிடையே நம்பிக்கை துளிர்விடவேண்டும் என்று விழைகின்றனர்கள். இந்த விருப்பத்தை உளத்திற்கொண்டு ஜெனிவா மகாநாட்டில் விவாதிக்கப்பட்ட பிரச்னைகளை வெளிவிவகார மந்திரிகள் தொடர்ந்துசர்ச்சைசெய்ய வேண்டும் என்று கோருகின்றனர். இப்பிரச்சினைகளுக்கு உறுதியான தீர்வுகாண வேண்டும் என்று கோருகின்றனர். இந்த விஷயத்தில் ஜெர்மனியை ஐக்கியப்படுத்துவதற்கும், ஐரோப்பிய பந்தோபஸ்துக்கும் இடையே யுள்ள தொடர்பைக் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும். இப்பிரச்சினைகளை வெற்றிகரமாகத் தீர்ப்பதன்மூலம் சமாதானத்தைப் பேணி வளர்க்கப் பேருதவி செய்யலாம் என்பதையும் கவனத்தில் வைக்கவேண்டும்.

ஐரோப்பிய பந்தோபஸ்தை ஸ்தாபிக்கும் விஷயத்தில் ஒவ்வொரு நாட்டுக்கும் தனியாகவும் கூட்டாகவும் தற்பாதுகாப்புக்கான நடவடிக்கைகளை எடுக்கும் இயல்பான உரிமைகள் இருக்கின்றன என்பதை உணரவேண்டும். இதை இலக்காகக்கொண்டே பல்வேறு ஆலோசனைகளையும் காண வேண்டும்.

### ஐரோப்பிய பந்தோபஸ்து

ஐரோப்பா முழுவதற்கும் பந்தோபஸ்து அல்லது ஒரு பகுதிக்கு பந்தோபஸ்து திட்டம். இதில் உறுப்பினராகச் சேரும் தேசம் பலாத்காரத்தில் இறங்கக்கூடாது, எந்த ஆக்கிரமிப்பாளருக்கும் உதவக்கூடாது என்ற நிபந்தனைகளை ஏற்கவேண்டும்.

படைகள் - ஆயுத தளவாடங்களை நிர்ணயித்து வரையறுத்தல், கட்டுப்படுத்தல், பரிசீலனை செய்வது.

இது பற்றிய இதர ஆலோசனைகளையும் விவாதிப்பது.

### ஜெர்மனி

ஜெர்மன் பிரச்சினையில் தீர்வு கண்டு ஜெர்மனியை ஐக்கியப் படுத்துவதில் தமக்குள்ள பொதுவான பொறுப்பை நான்கு வல்லரசுகளின் தலைவர்கள் உணர்கிறார்கள். எனவே, ஜெர்மன் மக்களின் தேசிய நலவுரிமைகளுக்கும் ஐரோப்பிய பந்தோபஸ்துக்கும் ஆதரவான வழியில் சுதந்திரமான பொதுத்தேர்தல் நடத்தி ஜெர்மனியை ஐக்கியப்படுத்த ஒப்புக்கொள்கிறார்கள். இப்பிரச்சினையில் சம்பந்தப்பட்ட பிற கட்சிகளைக் கலந்துகொண்டு ஆவன செய்ய வெளிவிவகார மந்திரிகள் ஏற்பாடு செய்வார்கள்.

### ஆயுதக் குறைப்பு

யுத்த அபாயம் அகற்றப்பட வேண்டும்; ஆயுத தளவாடங்களால் சுமத்தப்படும் பளுவைக் குறைக்கவேண்டும், சமாதானத்தையும் மக்கள் நல்வாழ்வையும் பேணிப் பாதுகாக்க வேண்டுவது அவசியம் என்று நான்கு வல்லரசுகளின் தலைவர்கள் விழைகின்றார்கள். எனவே, சகலவிதமான ஆயுத தளவாடங்களையும் படைகளையும் குறைத்துக் கட்டுப்படுத்திக் கொள்ளத்தக்க அமைப்பை திறமையான பாதுகாப்புகளுடன் நிறுவவேண்டும்.

### உடன்பாடு

இந்தத் துறையில் வெற்றி கண்டால், தேசங்களின் செல்வாதாரங்களை சமாதானபூர்வமான பொருளாதார அபிவிருத்தித் திட்டங்களில் ஈடுபடுத்தலாம். வளர்ச்சி குன்றியுள்ள நாடுகளை. வளப்படுத்தி, அந்நாடுகளின் நல்வாழ்வுக்கும் உதவலாம். இதை உணர்ந்து பின்வரும் உடன்பாட்டுக்கு வந்தனர்:

1. இந்த லட்சியங்களுக்காக ஒன்று சேர்ந்து பாடுபடுவது. ஐ. நா. ஆயுதக் குறைப்பு கமிஷன் மூலம் ஒரு பொதுவான ஆயுதக் குறைப்பு அமைப்பை ஏற்றுக் கொள்வது.

2. இக் கமிஷனில் பணியாற்றி வரும் அந்தந்த நாட்டுப் பிரதிநிதிகள் நால்வர் மகாநாட்டில் வெளியிடப்பட்ட கருத்துக்களைக் கவனத்தில் வைக்கும்படி வலியுறுத்துவது.

3. இந்த உப கமிட்டியின் அடுத்த கூட்டம் 1955, ஆகஸ்ட் 29ந் தேதி நியூயார்க்கில் நடத்தப்படவேண்டும் என்று கோருவது.

4. ஆயுதக் குறைப்புக் கமிஷன் நடவடிக்கைகளையும், இந்த மகாநாட்டில் நான்கு வல்தரசுகளின் தலைவர்கள் முன்வைத்துள்ள அபிப்பிராயங்களையும் வெளிவிவகார மந்திரிகள் கணக்கிலெடுத்து, ஆயுதக்குறைப்பு விஷயத்தில் உருப்படியான வழியில் முன்கை எடுப்பதுபற்றி ஆலோசிக்கவேண்டும்.

### கிழக்கு-மேற்கு உறவுகள்

1. மக்களிடையே பரஸ்பரம் போக்குவரத்து, சமாதான ரீதியாக வர்த்தகம் இவை நடைபெறுவதற்கு குறுக்கே நிற்கும் தடைகளை படிப்படியாக அகற்றவேண்டும்.

2. நாடுகளுக்கும் மக்களுக்கும் பரஸ்பரம் நலன் பயக்கும் சுதந்திரமான உறவுகளும், பரிமாற்றங்களும் செயல்படச் செய்ய முயலவேண்டும்.

இந்த விஷயத்தில் ஐ. நா. விலுள்ள ஸ்தாபனங்கள் மூலம் நிபுணர்களைக்கொண்டு எத்தகைய நடவடிக்கைகள் எடுக்கலாம் என்பதைக் கண்டு பிடித்துக் கையாள வெளி விவகார மந்திரிகள் முயல வேண்டும்.

இந்தப் பிரச்சினைகளைப் பற்றி விவாதிக்கவும், தமது வேலைகளை ஸ்தாபனரீதியாக உருவாக்கிக் கொள்ளவும் வெளி விவகார மந்திரிகள் அக்டோபர் மாதத்தில் ஜெனிவாவில் கூடுவார்கள்.

ஆசியப் பிரச்சினைகள் விவாதத்திற்கு எடுக்கப்படாதது பெருங் குறை. இதர விஷயங்களிலும் பரஸ்பரம் மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருந்தன. ஆனால் வேற்றுமைகளை சமரசமாகத் தீர்த்துக் கொள்ளலாம் என்ற கோட்பாடு சகலராலும் அங்கீகரிக்கப்பட்டது.




## தேபருக்கு
## 'பாண்டிச்சேரி மருந்து!'

கம்யூனிஸ்டுகளெல்லாம் பித்தளைகள், இமிடேஷன் முத்துக்கள், நெல்லுக்கு இறைத்த நீரை உண்ணும் புல்லுகள், அன்னிய நாட்டு ஏஜெண்டுகள், தேச பக்தி இல்லாதவர்கள் என்று அகில இந்திய காங்கிரஸ் தலைவர் தேபர், பாண்டிச்சேரி மக்களுக்கு உபதேசித்தார் அல்லவா?

கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவரும், புதுவை மக்களின் ஒப்பற்றத் தலைவருமான தோழர் சுப்பையாவையும் அவருடன் கூட்டு சேர்ந்தவர்களையும் தோற்கடிக்க, தேபர் செய்த தேசபக்தப் பிரச்சாரம் அது. காங்கிரஸ் பொதுக்காரியதரிசி மாதவன் நாயர் வந்தார். மத்திய சர்க்கார் மந்திரிகள் வந்தனர். தேர்தல் 'நிபுணர்' ஆர். வெங்கட்ராமனும், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கக்கனும் கம்யூனிஸ்ட் சமாதியில் பூ வைத்து ஆட்சி செய்ய புதுவையிலேயே முகாமடித்தனர். முதலமைச்சர் காமராஜரும், நிதி அமைச்சர் சுப்பிரமணியமும் தலைகீழாக நின்றனர். தேர்தல் தில்லுமல்லுகளில் கை-தேர்ந்த ஜில்லா காங்கிரஸ் நிபுணர்கள், மட்டரகப் பிரச்சாரகர்கள், குண்டர் பட்டாளங்கள், பண மூட்டைகள் அத்தனை பேரும் வந்தார்கள்.

அவர்களின் பிரச்சார ஆயுதங்களாக கோயங்காவின் தினமணி பிரஸில் அச்சடிக்கப்பட்ட லக்ஷம் சுவரொட்டிகள் வந்தன. இது மட்டுமா? போலீஸின் பாரபட்சம், கள்ளுப் புட்டிகளின் கருணைகடாட்சம், புதுவை மில்களை மூடி மாதக் கணக்கில் தொழிலாளரைப் பட்டினி போடும் முதலாளிகளின் உதவி...ஆகியவை சகிதம் தேபரின் காங்கிரஸ் கட்சி தேர்தலில் குதித்தது.

எதிர்த்து நின்ற மக்கள் முன்னணி அபேட்சகர்களுக்கு இருந்த ஒரே வசதி, தேச விடுதலைப் போராட்டத்தில் பெற்ற தியாகத் தழும்புகளும் புதுவை ராஜ்ய மக்களுக்குப் புரிந்துள்ள இடையறாத சேவையுமே.

தேர்தல் முடிவுகள் தெரிந்துவிட்டன. பித்தளையையும் சொக்கத் தங்கத்தையும் பிரித்துப் பார்க்கும் தட்டாரைப் போல, சிப்பிமுத்தையும் செயற்கை முத்துவையும் தெரிந்துகொள்ளும் வியாபாரியைப் போல, நெற்செடியையும் புற் செடியையும் புரிந்துகொள்ளும் விவசாயியைப்போல, பாண்டிச்சேரி மக்கள் தகுதியுள்ள பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து விட்டார்கள். செல்லான் நாய்க்கர் ஆட்கள் பிடிவாதமாகப் போட்டியிட்டதின் காரணமாக, மும்முனைப் போட்டியின் காரணமாக 153 ஓட்டு வித்தியாசத்தில் செத்தேன் பிழைத்தேன் என்று, காங்கிரஸ் கட்சியின் அருமந்தக் கூட்டாளி குபேர் ஜெயித்தார். முதலியார் பேட்டையில், காங்கிரஸின் பேர் சொல்ல ஒரு நாதியுமில்லாமல் காங்கிரஸ் ஓட்டைப் படகு கவிழ்ந்துவிட்டது. பாண்டிச்சேரி நகரில் காங்கிரஸ் கட்சிக்கு படு தோல்வி. முனிசிபல் தேர்தல் முடிவுகளோ எல்லாவற்றையும் மிஞ்சிவிட்டன.

காங்கிரஸ் கட்சியின் சமீபகால சரித்திரத்தில், மக்களிடமிருந்து இப்படிப்பட்ட அடிவாங்கியதே இல்லை.

இந்த நிலைமைக்குக் காரணம் என்ன? $7\frac{1}{2}$ ஆண்டுகளாக, மக்களைக் கொடுமைப்படுத்தி, மக்களின் வரிப்பணத்தைக் கொள்ளையடித்து லட்சாதிபதியான குபேர் கும்பலை, காங்கிரஸ் காளைமாடு முதுகில் ஏற்றிச் சுமக்கிறது. அந்தக் கும்பல் ஆட்சி பீடமேறினால், மீண்டும் தங்களுடைய கதியும், வரிப்பணமும் என்னவாகுமோ என்று மக்கள் நினைக்கிறார்கள். தங்கள் தாயகத்தின் விடுதலைக்காகவும் நல்வாழ்வுக்காகவும் ஆரம்ப முதல் தியாகஉணர்வுடன் போராடிய தலைவர் சுப்பையாவையும் கம்யூனிஸ்ட் கட்சியையும் அதனுடன் கூட்டாக நிற்போரையும் மக்கள் நேசிக்கிறார்கள்.

இந்த உண்மையை நேர்மையான காங்கிரஸ்காரர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். "காங்கிரசுக்கு தன்னலமற்ற தியாகமும் மக்களுக்குத் தொண்டுபுரியும் ஊழியர்களும்தான் தேவை. சுயநலமிகள் வேண்டாம்!! என்று புதுவைக்கூட்டத்தில் தேபர் பேசினார். புதுவை மக்கள் இந்தத் தேர்தல் மூலம் கேட்கிறார்கள்! "குபேரும் முத்துப்பிள்ளையும், நந்தகோபாலும் தன்னலமற்ற தியாகிகளா? மக்களுக்குத் தொண்டு செய்தவர்களா?" என்று! தக்க பதிலும் சொல்லிவிட்டார்கள். அவர்கள் பத்து வருஷங்களுக்கு முன்னே எந்த நிலைமையில் இருந்தார்கள்? இப்போது எத்தனை பங்களாக்கள்! எவ்வளவு பாங்கிப் பணம்! எவ்வளவு நிலபுலங்கள்! வாங்கியிருக்கிறார்கள். இவையெல்லாம் எப்படிக் கிடைத்தன? என்று புதுவை நகர ஹோட்டல்களிலும், மக்கள் கூடுமிடங்களிலும், தேச பக்தி மிகுந்த நேர்மையான காங்கிரஸ்வாதிகளே, போய்க் கேட்டுப் பாருங்கள்! கேட்டு தேபர் அவர்களுக்கு கடிதம் போடுங்கள்! பாண்டிச்சேரியிலிருந்து கிடைக்கும் பதில் தேபரின் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு வெறி தணிவதற்கு உதவி புரிய வேண்டும்.

பித்தம் தலைக்கேறியவர்களுக்கு சீக்கிரம் குணமாவது கஷ்டம். இருந்தாலும் பாண்டிச்சேரி மருந்து ஓரளவு குணப்படுத்தலாம்.

—ஐ. மா. பா.




Regd. M. No. 5934 Printed & Published by G. ALAVANDAR, at Janasakthi Press, Subodhaya Buildings, 38, Mount Road, Madras 6.
OFFICE: 3, Anthony Street, Madras-14. Editor: K. MUTHIAH.
REGISTERED AS A NEWS PAPER IN CEYLON.